வாழ்வில் நம்பிக்கையூட்டும் அம்பாள் வெளியீடுகள்

# தேவி தரிசனம்

## பண்ணாரி மாரியம்மன்





பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

# தேவி தரிசனம்

## பண்ணாரி மாரியம்மன்

(அம்பாள் ஸ்தோத்திர சுலோகங்கள்
பாமாலை இணைப்புடன்)



பொன். பாஸ்கர மார்த்தாண்டன்







**அம்பாள் பதிப்பகம்**
48, ராமநாயக்கன் தெரு
நுங்கம்பாக்கம்
சென்னை—600034

முதற்பதிப்பு : ஆகஸ்ட், 1981

தாமரை மணாளன் தயாரிப்பு

அட்டையை அலங்கரிக்கும்
பண்ணாரி மாரியம்மன் மூலஸ்தான
திருவுருவத்தை வரைந்து உதவியர் ஓவியர் மணிவேல்

விலை ரூ-3

அச்சிட்டோர் : அன்னை அஞ்சுகம் அச்சகம்
இராயப்பேட்டை, சென்னை—600014.

3-3

## அம்பிகையே, நின் அருட்பதம் போற்றி!

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே?

ஆட்டுவிப்பவள், அண்ட கோடிகளுக்கும் அனைத்துயிர்களுக்கும் ஜீவ ஒளியான என் அம்மா அகிலாண்டேசுவரி.

அவள் இயக்குகிறாள்; நான் இயங்குகிறேன்.

இந்த அம்பாள் பதிப்பகத்தின் இயக்கமே என் அம்மாவின் அருள் விளையாட்டுதான்.

இதயம் பேசுகிறது இதழில் நான் தேவிதரிசனம் தொடரை எழுதும்போதே பல அன்பர்கள் என்னிடம் இந்த யோசனையை தெரிவித்தார்கள். ஒவ்வொரு தலத்தைப் பற்றிய கட்டுரைகளையும், என்றும் போற்றிப் பாதுகாக்கும் வண்ணம் உயரிய முறையில் நூலாகத் தொகுத்து வெளியிடலாமே என்பது அந்த அன்பர்கள் தெரிவித்த விருப்பம்.

இந்த யோசனையைச் செயல்படுத்துவது பற்றி பரிசிலித்தேன். நான் 'இதயம் பேசுகிறது' இதழில் எழுதிய கட்டுரைகளோடு அந்தந்த தேவிக்குரிய அரிய சுலோகங்களையும் நாமாவளிகளையும் இணைத்து வெளியிட்டால், பக்தர் பெருமக்களுக்கு அன்றாடம் பாராயணம் செய்வது உயரிய வாழ்வியல் பலன்களையும் பெற முடியுமே என்று தோன்றியது.

அதன்படி அன்பர்களுக்கு பயன் தரும் வகையில்—வாழ்வில் நம்பிக்கையூட்டும் வண்ணம் தேவி தரிசனம் நூல்களை அரிய ஸ்தோத்திர சுலோகங்களின் இணைப்புடன் வெளியிடத் திட்டமிட்டேன். அன்னை மூகாம்பிகை தலத்துக்கு நான் சென்ற போது, அம்பிகையிடம் என் நோக்கத்தைப் பிரார்த்தனையாகத் தெரிவித்து, அதைச் செயல்படுத்தும் பொறுப்பையும் அவளிடமே ஒப்படைத்தேன்.

சில அபூர்வ புனித அன்பர்களின் எல்லையற்ற ஒத்துழைப்புடன் என் திட்டத்தை நிறைவேற்ற அருள் புரிந்தாள், அம்பிகை.

பல வடமொழிச் சுலோகங்களையும் ஸ்தோத்திரங்களையும் ஓர் அரிய அன்பர் (தன் பெயரை வெளியிட விரும்பாதவர்) தொகுத்துத் தருகிறார்.

இதுவரை வெளியான தேவி தரிசனம் நூல்களிலும் (பெரிய பாளையம் பவானி அம்மன்—மயிலை உறை மகாசக்திகள்) அந்தப் புதிய இணைப்பான சுலோகங்களும் நாமாவளிகளும் இடம்பெறக் கண்டிருப்பீர்கள்.

ஆதி சங்கர பகவத் பாதாள் முதல் பல மகான்களும் சித்தர்களும் நமக்குக் கடலளவு அருட் சுரங்கமாக சுலோகங்களையும் ஸ்தோத்திரங்களையும் அருளிச் செய்திருக்கிறார்கள். அவற்றை அன்றாடம் பக்தி சிரத்தையுடன் பாராயணம் செய்து அம்பிகையை வழிபட்டால், நினைத்த காரியங்கள் பலிதமாவதை பல அன்பர்கள் அனுபவ பூர்வமாக கண்டிருக்கிறார்கள். வடமொழியில் பாண்டித்தியம் இல்லாத அன்பர்கள் அந்தச் சுலோகங்களுக்கு இந்நூலில் தரப்பட்டிருக்கும் தமிழ் விளக்கங்களைப் பாராயணம் செய்து தேவியை வழிபட்டாலும் போதும். அம்பாளின் அருட்கருணையால் நினைத்த காரியங்கள் சித்திக்கும்.

அவள் நினைத்தால் ஆகாதது எது?

அம்பாள் பதிப்பகத்தின் வெளியீடான தேவிதரிசனம் நூல்களின் முழுப் பயனையும் அன்பர்கள் தம் வாழ்வில் பெற்று மகிழ, அம்பிகையின் அருள்கிட்ட அவளுடைய பொற்பாதம் பற்றிப் போற்றி வணங்குகிறேன்...

பொன். பாஸ்கர மார்த்தாண்டன்
(தாமரை மணாளன்)

3-3

வாழ்வில் நம்பிக்கையூட்டும்

# அம்பாள் வெளியீடுகள்

வெளி வந்து விட்டன!

1. தேவி தரிசனம்

குலம் காக்கும் கோமதி அம்மன்

பொன் பாஸ்கர மார்த்தாண்டன்

விலை ரூபாய் 3

2. இனிய இல்வாழ்க்கை

இருபது முதல் அறுபது வரை சில ரகசியங்கள்

எழுதியவர்! ஸௌந்தர்யா

விலை ரூபாய் 3

3. தேவி தரிசனம்

வேப்பிலை நாயகியாம் பெரியபாளையம் பவானி அம்மன்

எழுதியவர்! பொன் பாஸ்கர மார்த்தாண்டன்

விலை ரூபாய் 3

4. ஆவி உலக அனுபவங்கள்

ஆராய்ச்சி நிபுணர்—கௌரி சங்கர்

விலை ரூபாய் 3

5. தேவி தரிசனம்
மயிலை உறை மகா சக்திகள்
(கோலவிழி அம்மன்—முண்டகக்கண்ணி அம்மன்)
எழுதியவர் : பொன் பாஸ்கர மார்த்தாண்டன்
விலை ரூபாய் 3

6. தணிகைக் குமரன்
விலை ரூபாய் 0 75

7. தேவி தரிசனம்
பண்ணாரி மாரியம்மா
(அச்சில்) விலை ரூபாய் 3

8. தேவி தரிசனம்
மாங்காடு காமாட்சி அம்மன்
எழுதியவர் : பொன் பாஸ்கர மார்த்தாண்டன்
(அச்சில்) விலை ரூபாய் 3

9. பெண்களே, அலுவலகத்தில்
ஆண்கள் ஒரு பிரச்சினையா?
எழுதியவர் : பார்க்கவி
(அச்சில்) விலை ரூபாய் 3

10. தேவி தரிசனம்

நெல்லை காந்திமதி அம்மன்

எழுதியவர் : பொன் பாஸ்கர மார்த்தாண்டன்

(அச்சில்) விலை ரூபாய் 3

11. டீன் ஏஜ் மீறல்கள்

எழுதியவர் : ஜான்ஸி ராணி

(அச்சில்) விலை ரூபாய் 3

12. ஹிப்னாடிசம் மெஸ்மரியம்

ஆண் பெண் மனோவசியங்கள்

எழுதியவர் : சுப்ர பாலாஜி

(அச்சில்) விலை ரூபாய் 3

விற்பனையாளர்களுக்கு 25% கழிவு உண்டு. கழிவு நீக்கி முன்பணம் அனுப்பவேண்டும். தனிப் பிரதி வேண்டுவோர் பத்திரமாக பதிவுத் தபாலில் பெற நூல் விலையுடன் தபால் செலவுக்காக ரூ 2 50 சேர்த்து அனுப்பவும்.

அம்பாள் பதிப்பகம்

48, ராம நாயக்கன் தெரு

நுங்கம்பாக்கம்

சென்னை—34

# 1

கோயிற் கடிமையம்மா, கொண்டாடும் பாலனம்மா!
சந்நிதி மைந்தனம்மா, சங்கரியே, பெற்றவளே!
இல்லார்க்கும் ஏழையர்க்கும் இல்லாமை
போக்கியல்லோ,
எல்லையரசாளும் என் தாயே ஈசுவரியே!
மண்ணுக்குள் மரகதமே, மாந்தருடை கற்பகமே!
எண்ணத்தால் எமைக் காக்கும் பண்ணாரி மாரியம்மா!
உன் மகிமையறிந்தவர்கள் மண்டலத்தில் யாருமில்லை.
உன்னைப்போல் தெய்வத்தை உலகத்தில்
கண்டதுண்டோ!

—மாரியம்மன் தாலாட்டு

வளமார்ந்த கொங்கு நாட்டின் வடவெல்லையில் ஓங்கி நிமிர்ந்திருக்கிறது, திம்பம் மலைப்பகுதி. அந்த மலைச்சாரலில் அடியொற்றி ஓடுகிறது, வானியாறு. ஏகாந்தமும் அமைதியும் இருக்கைக் கொண்டு—இயற்கையே தனிமை நாயகியாகப் பூத்திருப்பது போன்ற அந்தக் காட்டுப் பகுதியில்—

திடீரென்று ஒரு நாள்...

ஜோதியாய் ஓர் அற்புதச் சுடர் உலகுக்கு வீசுகிறது.

இரண்டே இரண்டு ஆண்டுகளுக்கு முன்தான் நடந்த நிகழ்ச்சி அது...

திம்பம் மலை வழியே மைசூரிலிருந்து புறப்பட்ட ஒரு பஸ் வந்து கொண்டிருக்கிறது. மலையின் உச்சிப் பகுதியைக் கடந்து, பஸ் இறங்கிக் கொண்டிருக்கும் நேரம். திடீரென்று ஒரு சிறுமி கை காட்டி பஸ்ஸை வழிமறிக்கிறாள். அந்தச் சிறுமியோடு வேறு யாரும் அங்கே நிற்கக் காணோம்.

கண்டக்டருக்கும் டிரைவருக்குமே வியப்பு! 'இப்படி தன்னந்தனியாக ஒரு குழந்தை காட்டு மலைப்பாதையில் நிற்கிறதே' என்று!

பஸ்ஸை நிறுத்திக் குழந்தையை ஏற்றிக் கொள்கிறார்கள். சுமார் பதினொரு பன்னிரண்டு வயது தானிருக்கும் அந்தச் சிறுமிக்கு. மேனியெல்லாம் தகதகவென்று ஜொலிக்கும் தங்க நகைகள்! மலர மலர விழித்து, பஸ்ஸில் இருந்த அனைவரையும் பார்த்து சந்திர ஒளியாய் புன்னகைத்துக் கொண்டிருக்கிறாள் அவள்.

கண்டக்டர்—டிரைவர் உட்பட பஸ்ஸில் உள்ள அத்தனை பிரயாணிகளுக்கும் வினாடிக்கு வினாடி வியப்பு அதிகமாகிக்கொண்டே வருகிறது. 'இவ்வளவு நகை போட்டுக் கொண்டு ஒரு சிறுமி மலைப்பகுதியில் தனியாக ஏறியிருக்கிறாளே! இவளுக்கு அச்சமில்லையா? இவளைத் தனியாக அனுப்பிய பெற்றோர் உற்றோருக்குத்தான் பயமில்லையா?' என்று பிரமித்துப் போயிருக்கிறார்கள். முல்லை மலர்க் கொத்தாய் முகிழ்த்து, மோகனச் சிரிப்பாய் பொலிந்துகொண்டிருக்கும் அந்த கள்ளமில்லா இளஞ்ஜோதி முகத்தையே அனைவரும் வைத்த கண்ணைத் திருப்ப முடியாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

கண்டெக்டர் அச்சிறுமியிடம் சென்று, "குழந்தே, டிக்கெட் வாங்கிக்கோ!" என்கிறார்.

குழந்தை மின்னலாய் ஓர் இளஞ்சிரிப்பை உதிர்த்தவாறே, "கீழே பண்ணாரிக்குப் போனதும் வாங்கிக்கோ!" என்கிறது. அதற்குமேல் கண்டக்டரால் வலியுறுத்திக் கேட்க முடியவில்லை.

சிறுமியின் சிரிப்பும், அவள் அதைச் சொன்ன விதமும் கண்டக்டருக்கு ஓர் அமானுஷிய கட்டளை போலிருக்கிறது! அவரால் மறுமொழியே கூற முடியவில்லை.

பஸ் மலைச்சரிவின் வழியே இறங்கி ஓடிக்கொண்டிருக்கிறது.

மலையின் அடிவாரத்தில் உள்ள கிராமப்பகுதிதான் "பண்ணாரி." மலையைக் கடந்து பண்ணாரிக்கு வரும் பாதை மிகவும் பயங்கரமான மலைத்தடம். எண்ணற்ற 'ஹேர்பின்' (கொண்டை ஊசி) வளைவுகள் கொண்ட அந்தப் பாதையில் பஸ் ஏறும்போதும், இறங்கும்போதும் மிக எச்சரிக்கையாகத்தான் டிரைவர் செலுத்துவார். பிரயாணிகளும் மிகுந்த மனப்படபடப்புடன் பஸ்ஸில் அமர்ந்திருப்பார்கள். அவ்வளவு அச்சமூட்டும் பாதை அது!

அப்படிப்பட்ட ஒரு பாதையில், அன்று அந்த சிறுமி ஏறியிருக்கும் பஸ் மாத்திரம் வழக்கத்திற்கு விரோதமாக ஏதோ தெய்வலோகத்திலிருந்து புஷ்பக விமானம் இறங்குவதுபோல் கம்பீரமாகவும், அலாதி சுகத்துடனும் இறங்குகிறது. பயணிகள் அனைவரும் மெய்ம்மறந்து போயிருக்கின்றனர். அந்தச் சிறுமியோ மோகனப் புன்னகை முத்துச் சுடர் ஒளியாய் ஜொலிக்க ஒவ்வொருவரையும் நோக்கிப் புன்னகைத்துக் கொண்டிருக்கிறாள். அந்தப் புன்னகை வீச்சுப்பட்ட ஒவ்வொருவரும், அது தம் இதயத்தை ஊடுருவி எல்லையற்ற அடிமனத்தின் ஆதார சுருதிகளையெல்லாம் மீட்டி ஒரு சுகந்தமான ராகத்தை உள்ளத்துள் கிளர்ந்தெழச் செய்வதாக உணர்ந்தவர்களாய், தம்மை மீறிய பரவசக் கிளர்ச்சிக்கு உள்ளாகிப் புல்லரித்துப் போயிருக்கின்றார்கள்.

பஸ் பண்ணாரிக்குள் வந்து அங்கிருக்கும் மாரியம்மன் ஆலயத்தின் முன்னால் நிற்கிறது. அது அவ்விடத்தில் சர்வ சதாகாலமும் நிகழ்ந்து வரும் பழக்கம். மலைப்பகுதி ஓரம் எல்லைத் தெய்வமாகக் குடிகொண்டிருக்கும் காடுறை காளி மாதேவியான மாரியம்மன் ஆலயத்தின்முன் தம் வாகனங்களை நிறுத்தி, பிரார்த்தித்துக் கொள்ளாமல் எந்த பஸ்ஸும் காரும் அந்த இடத்தைவிட்டு நகருவதில்லை. மலையில் ஏறுவோர்களானாலும் சரி, மலையிலிருந்து இறங்குவோர்களானாலும் சரி—அப்படி அவர்கள் வேண்டிக் கொள்வதன் காரணமாகத்தான், பயங்கரமான அந்த மலைப்பாதையில் இது

வரை எந்த விபத்துமே ஏற்படவில்லையாம். அங்கே வாகனத்தை நிறுத்தாமல் அலட்சியமாகச் சென்றவர்கள் உடனடியாகவே ஒரு சிக்கலைச் சந்தித்து, பின் பண்ணாரி மாரியை நினைத்து அந்த சிக்கல் நீங்கப் பெற்றிருக்கின்றார்கள்.

எனவே, அந்த மரபையொட்டித் தான் சிறுமி ஏறிய அந்த பஸ்ஸும் மாரியம்மன் ஆலயத்தின் வாசலில் வந்து நின்றது. சிலபயணிகள் இறங்குகிறார்கள். அவர்களுடன் அந்தக் சிறுமியும் இறங்குகிறாள்.

அதுவரை ஏதோ ஒரு சக்திக்குக் கட்டுப்பட்டவர் போலிருந்த கண்டெக்டர் திடீரென்று சுதாரித்துக் கொண்டவரைப் போல் அந்த சிறுமியிடம், ''குழந்தே! டிக்கெட் எடுத்துக்கொள்; 'பண்ணாரி வந்ததும் வாங்கிக்கிறேன்'னு சொன்னியே?'' என்று கேட்கிறார்.

குழந்தை முகத்தில் அப்போதும் ஒரு மந்தமாருத மோகனமான புன்னகையே ஒளிர்கிறது. தன் பவள இதழ் திறந்து, ''என்னோடு வா! தர்றேன்'' என்று கூட்டத்தோடு கூட்டமாக முண்டியடித்துக் கொண்டு பஸ்ஸிலிருந்து இறங்குகிறது. கண்டக்டரும் சிறுமியைத் தொடர்ந்து இறங்கி குழந்தையின் பின்னால் செல்கிறார். குழந்தையின் நடையிலே உல்லாசத் துடிப்புமிக்க வேகம்! விறுவிறுவென்று வேகமாகக் கோயிலை நோக்கிச் செல்கிறது. கண்டக்டரோ ஏதோ ஈர்ப்பு சக்தியில் உந்தப்பட்டவரைப் போல் குழந்தையைத் தொடர்ந்து ஓடுகிறார்.

ஆலயத்தினுள்ளே உண்டியல் பக்கம் வந்ததும் சிறுமி அங்கே நின்று கண்டக்டரைப் பார்க்கிறாள். அதற்குள் கண்டக்டரும் மூச்சிறைக்க அங்கு வந்து நிற்கிறார். குழந்தை அவரைப் பார்த்து ஒளிச் சிரிப்பு மின்ன, ''டிக்கெட் பணத்தை இந்த உண்டியல்லேருந்து எடுத்துக்கோ!'' என்று கூறிவிட்டு- கண்டெக்டர் இமைத்துப் பார்க்கும் முன், அத்தனை சேவார்த்திகளும் பார்த்திருக்க, விறுவிறுவென்று சந்நிதிக்குள் சென்று விடுகிறது!

''குழந்தே! குழந்தே...'' என்று எல்லாரும் தேடுகிறார்கள். அம்மன் சந்நிதிக்குள் சென்ற அந்தக் குழந்தையை யாரும் காணவில்லை... குழந்தைச் சிரிப்பும் கோலத்திரு முகமுமாகக் கோடிசூரியப் பிரகாசத்துடன் சுடர்விட்ட எந் தாய் பண்ணாரி மாரியம்மாவின் பங்கஜத் திருவடிவ திருமுகத்தையும்—அதில் ஒளிர்ந்த தேனமுதப் புன்னகையையும் தான் அவர்களால் தரிசிக்க முடிந்தது!

''அம்மா! அலகிலா விளையாட்டுடை அமுதத் திரு நாயகியே! உன்னைத் தேடித் தவிப்போருக்குத் திருக்காட்சி அருளுவதற்கோ சின்னஞ்சிறுமியாய், சிற்றடியும்—சீரடியும் நடைபாவ வந்துற்றாய்! வாழ்வளிக்கக் காட்சி தந்தாய்!' என அன்று அச் சந்நிதியில் கூடியிருந்த அத்தனைப் பக்தர்களும் புல்லரித்துப் பரவசமுற்று, சிந்தையெல்லாம் சிலிர்ப்பூட்ட சேவித்து நின்றனர்.

இன்றும் அந்த ஆனந்தக் காட்சியினால் ஏற்பட்ட இனிய உணர்விலேயே திளைத்து மகிழ்ந்து கொண்டிருக்கிறது அந்தப் பகுதி.

இனம்— மதம்—மொழி— அனைத்துப் பேதங்களையும் கடந்து, மக்களின் எல்லையற்ற பக்திக்கு ஈடற்ற இலக்காக அமர்ந்திருக்கும் அருள்மிகு பண்ணாரி மாரியம்மன் ஆலயம் மைசூருக்கும்— கொங்கு நாட்டிற்கும் நடுவில் அமைந்திருக்கிறது.

கோவை மாவட்டம்- சத்தியமங்கலத்திலிருந்து மைசூர் செல்லும் பாதையில் எட்டுமைல் தொலைவில், திம்பம் மலையடி வாரத்தில் வானியாறு தன் பாத பிரவேசத்தை அடிவருடி ஓட, எல்லைத் தெய்வமாகக் கோயில் கொண்டிருக்கிறாள் எம் தாயான பண்ணாரி மாரியம்மன்.

ஈரோட்டிலிருந்தும், பவானிசாகரிலிருந்தும், மைசூரிலிருந்தும் பஸ் மூலமாகவோ — கார் மூலமாகவோ சென்று

பக்தர்கள் தரிசிக்கும் வண்ணம் அவளுடைய ஆலயம் கேந்திரம் பெற்று அமைந்திருக்கிறது.

* * *

ஈரேழு புவனங்களுக்கும், எண்ணற்ற அண்ட கோடிகளுக்கும்—அவற்றில் உறையும் கோடானுகோடி ஜீவராசிகளுக்கும் அன்னையாம் உமாமகேஸ்வரி, ''பண்ணாரி திருத்தல'த்தில் பக்தர்களுக்கு சுயம்புமூர்த்தியாகக் காட்சியளித்த சம்பவம் சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்புதான் அந்தக் கொங்கு நாட்டுத் தீரத்தில் நிகழ்ந்தது...

## 2

ஐந்து சடை கொஞ்சிவர மாரிஅழகுசடை மார்பிறள,
கொஞ்சும் சடையிலேயே மாரிக்கு குயில் இருந்து தாலாட்ட
வடக்கே யிருந்தல்லோ மாரியம்மா வந்து நின்றாள் பண்ணாரி!
தனக்கிசைந்த எல்லை என்று மாரி தனித்து அடித்தாள் கூடாரம்!
எல்லையிலே நீயமர்ந்தாய் எங்கள் தில்லைவன நாயகியே!
தில்லைவனத் தெல்லைவிட்டு திரும்பம்மாயிற்த முகம்!
வந்தமனை வாழுமம்மா, நீ இருந்தமனை ஈடேறும்!
சொந்தமென உனைத்தேடி தொழுது நிற்போர் கோடிஜனம்!

—மாரியம்மன் பாமாலை

மலையடிவாரத்தில் வனதேவியாய் ஏகாந்தமாய் இருக்கைகொண்டு, அருள்புரியும் இந்தப் பண்ணாரி மாரியம்மா உண்மையில், 'பொன் மாரியா' அல்லது பண் மாரியா?' என்று வியந்து வினா எழுப்புகிறார் பேரூர் ஆதீனகர்த்தரான தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்!

அந்தத் திருத்தலத்தில் நின்று அன்னையாம் பண்ணாரித் தாயின் திருமுகம் நோக்கித் தொழுது நின்றபோது இந்த அடியவனின் உள்ளத்தில் தோன்றிய உணர்வுக்கிளர்ச்சி... அம்மம்மா...!

'மண்ணிடை மரகதமாய், மாந்தருக்குக் கருணையமுதமாய் சுந்தரக்கோடி பிரகாசமாய் சுடர்விட்டு சுயம்புவாய் எழுந்தருளியிருக்கும் தேவி! இப்புவிக்கு பண்ணும் நீயே! பொன்னும் நீயே!' என்றே போற்றிப் பரவித் தொழுகிறது அங்கு குழுமி நிற்கும் எண்ணற்ற பக்தர் கூட்டம்.

அத்தலத்தில்—அம்மாவின் ஆலயமும், அந்த ஆலயத்தைச் சார்ந்து வாழும் ஊழியர்களும் அல்லாது வேறு மக்களின் குடியிருப்பு எதுவும் இல்லை.

இருந்தும், அவள் சந்நிதியோ மக்கள் கடலால் சூழ்ந்து அருட்குரலாய் ஆரவாரித்துக் கொண்டிருக்கிறது. காலை முதல் இரவுவரை அணி அணியாய் அலை அலையாய் பக்தர்கள் கூட்டம் குழுமி சேவித்துச் சென்று கொண்டிருக்கிறார்கள்.

நிமிடத்துக்கு நிமிடம் பஸ்ஸிலும், காரிலும், இதர வாகனங்களிலும் மக்கள் வந்து இறங்குகிறார்கள். அம்மனைச் சேவிக்கிறார்கள்; புறப்படுகிறார்கள். அதற்குள் இன்னொரு கூட்டம் வருகிறது. இப்படி—ஒரு சங்கிலித் தொடர்போல் திக்கெட்டிலிருந்தும் திரளும் அக் கூட்டத்தில் எத்தனை ஜனங்கள்...எத்தனை இனங்கள்! அங்கே ஜாதி இல்லை; மொழி இல்லை; பெரியோர் என்றில்லை; சிறியோர் என்றில்லை... எல்லாரும் அம்மாவின் பிள்ளைகளாய்...ஒரு மகத்தான அருள் சங்கமம்!

அங்கே அவர்கள் மத்தியில் எத்தனை எத்தனையோ விதமான கோரிக்கைகள்... அந்தக் கோரிக்கைகள் நிறைவேறியதும் செலுத்தப்படும் காணிக்கைகள்...

அம்மாளின் அருளால் கண்நோய் நிவாரணம் பெற்றதற்காக, அவளுக்குக் காணிக்கையாகக் கண்மலர் காணிக்கை

செலுத்தி மகிழ்ந்து செல்கிறார்கள். பொள்ளாச்சி அம்புஜம் மாளும், வள்ளியம்மாளும்.

இருநூறு தேங்காய்களைக் குவித்து வைத்து, பண்ணாரித் தாயின் சந்நிதியில் உடைத்துக்கொண்டிருக்கிறார் பவானியைச் சேர்ந்த திரு. கே. சின்னராஜு `அவருக்குக் கல்யாணமாகி மூன்று வருடமாகக் குழந்தை' இல்லாமலிருந்ததாம். கரு உற்பத்தியாகி ஐந்து மாதம் ஆனதும் சொல்லி வைத்தாற்போல் 'அல்லாமல்' போய்விடுமாம்! இப்படி சிலமுறை ஆனதும் பண்ணாரி மாரியாத்தாவின் சந்நிதிக்கு வந்து, 'இனி இந்தக் குறையில்லாமல் காக்கவேணும். இருநூறு தேங்காய் உடைக்கிறேன்' என்று பிரார்த்தனை செய்துவிட்டுப் போனாராம். அதன்பிறகு எந்தச் சிரமமும் இன்றி அவர் துணைவியார் அழகான பெண் குழந்தையைப் பெற்றெடுத்தார். குழந்தைக்குப் 'புஷ்பா' என்று பெயரிட்டு, ஆத்தாளின் ஆலயத்துக்குக் கொண்டுவந்து தொழுது, தன் பிரார்த்தனைப்படி இருநூறு தேங்காய்களை அவள் சந்நிதியில் உடைத்து மகிழ்கிறார் அவர்...

புளியம்பட்டியைச் சேர்ந்த அமிர்தபாரதி என்ற இளம் பெண் (முத்துச்சாமி செட்டியார் மகள்) தன் பாட்டி அங்காயம்மாவுடன் அம்மன் சந்நிதியில் வணங்கிக்கொண்டிருக்கிறார். பாட்டியின் கண்பார்வை சரியில்லாமல் இருந்து அம்மனின் கோயிலுக்கு வந்ததில் குணமாகி விட்டதாம். அதற்காகப் பேத்தியை அழைத்துக்கொண்டு பிரார்த்தனை செலுத்தி வழிபட வந்திருக்கிறார் பாட்டி அங்காயம்மா. அவர் தன் பேத்தி அமிர்தபாரதியை கோயிலுக்கு அழைத்து வந்ததில் இன்னொரு முக்கியமான நோக்கமும் உண்டாம்...

ஆம்; பேத்தியின் கல்யாண விஷயம்தான். ''பண்ணாரியாத்தா கண் விழிச்சுப் பார்த்தாலே, நிமிஷமா நடத்துடும் கல்யாணம்!'' என்கிறார் பாட்டி.

''உங்களுக்குத் தெரிந்தவரை ஆத்தாளிடம் பிரார்த்தனை செய்து கல்யாண பாக்கியம் பெற்ற பெண்கள் யார், யார்...?'' என்று கேட்டேன்.

பாட்டி யோசனை செய்து கொண்டு, ''பளிச்சென்று நினைவுக்கு வரலையே!" என்கிறார்.

ஆனால், பேத்தி அமிர்தபாரதிக்கு பளிச்சென்று நினைவுக்கு வந்துவிடுகிறது! ''என் பிரெண்ட்ஸ் மணிமொழிக்கு—மல்லிகாவுக்கும் ஆத்தாளிடம் பிரார்த்தனை செய்ததும் கல்யாணமாகியிருக்கிறது!'' என்கிறார் சட்டென்று. யாருக்குத் தெரிந்திருக்க வேண்டுமோ அவருக்குத் தெரிந்திருக்கிறது!

உண்டியலில் ஒரு குழந்தை காணிக்கை செலுத்திக் கொண்டிருக்கிறது. எட்டு ஒன்பது வயது இருக்கும். அந்தக் குழந்தைக்கு. கிளி கொஞ்சம் சுபாவம்—பார்வை—பேச்சு. ஊர். குமுதவல்லி என்று பெயர். பவானி அருகே உள்ள அந்தியூர் சொந்த ஊராம். தானிய வியாபாரம் செய்யும் தன் தந்தை டி. கே. ராமலிங்கத்துடன் அம்மனைத் தரிசிக்க வந்திருக்கிற அந்தக் குழந்தை, ''நான் கஷ்டப்பட்டு நல்லா படிக்கிறேன். படிச்சா மட்டும் போதுமா? அம்மா நினைச்சாத்தானே நிறைய 'மார்க்'கிடைக்கும். அதான், பாடத்தில் நெறைய 'மார்க்' கிடைக்கணுங்கிறதுக்காக மாரியம்மாவை வேண்டிக் கொண்டிருக்கிறேன்'' என்கிறாள். அதைக் கூறும்போது அந்த முகத்தில் என்ன நம்பிக்கை, பரவசம்!

கூடவே, ''நீங்க, எங்க அந்தியூர் பத்ரகாளியம்மன் கோயிலுக்கும், பக்கத்திலிருக்கிற பாரியூர் கொண்டத்துக் காளியம்மன் கோவிலுக்கும் கட்டாயம் வாங்க...இந்த அம்மனைப் போலவே அந்த அம்மன்களும் ரொம்ப பெரிய சக்தியுடைய அம்மன்கள்! அங்க வரும்போது எங்க விட்டுக்கும் வாங்க!'' என்ற குமுதவல்லி, பக்கத்திலே நிற்கும் தன் தாயையும் தந்தையையும் பார்த்து' ''ஏம்மா நீங்களும் கூப்பிடுங்க. நான் சின்னப்பிள்ளை. நான்சொன்னாக் கேட்பாங்களா? நீங்களும் சொன்னாத்தானே அவங்களும் வருவாங்க...!'' என்றாள். அந்தப்பேச்சும், அந்த உறுதியான பக்தியும்...! ஏதோ அந்தச் சந்நிதியில், ஒரு காரைக்கால்

அம்மையாரின் சிறியத் தோற்றத்தைப் பார்த்து விட்டது போல் எனக்கு ஒரு மனப்பிரமை தட்டியது!

அந்தக் குழந்தை கூறியதுபோல்—அத்தலத்தை சுற்றி வேறு சில சக்தி வாய்ந்த அம்மன் தலங்களும் உண்டாம். சக்திதேவி, வல்லமை மிக்க ஆறு சக்திகளாக அவ்விடங்கசூல் எழுந்தருளியிருக்கிறுளாம். அந்த ஏழு சக்திகளுக்கும் நடுநாயகமாக எல்லேகாத்துநிற்கிருள் 'பண்ணுரி மாரியம்மா' மற்ற சக்திகள் பாரியூர் கொண்டத்துக் காளியம்மன்; அந்தியூர் பத்ரகாளியம்மன்: பவானி செல்லாண்டியம்மன்; வடக்குப்பேட்டை தண்டு மாரியம்மன்: பண்ணுரியிலேயே இருக்கும் இன்னெரு சக்தியான சருகு மாரியம்மன்!

ஃ ஃ ஃ

மகா சக்தியின் வல்லமை மிக்க கேந்திரமாகத் திகழும் அந்தப் பிரதேசத்தில்—பண்ணுரி மாரியம்மன் சுயம்பு மூர்த்தியாக காட்சி தந்த அந்த மகிமைபெற்ற நிகழ்ச்சி—சுமார் 200 ஆண்டுகளுக்குமுன்தான் நிகழ்ந்திருக்கிறது...

அன்னே அத்தலத்தில் காட்சியருளுவதற்கு முன்... அதாவது, சில நூறு ஆண்டுகளுக்கு முன்வரை அந்த மலேப் பகுதியானது கற்களும் புதர்களும் அடர்ந்த ஓர் இருண்ட வனந்திரமாக இருந்தது. எம்மனூர், நஞ்சைசயகவுண்டனூர், பரிசபாளேயம், நிரவனூர், லம்பாடிக்கரை, சோகரை, நுணமத்தி, தொட்டமாளம் என்ற பெயர்களுடன் சில சிற்றூர்களேக் கொண்டதாக அப்பகுதி இருந்தது. அந்தப் பகுதியிலுள்ள வனம் மாடுகள் மேய்வதற்கு ஏற்ற புல்வெளியாகவும் அமைந்திருந்ததால், சற்று அருகேயுள்ள வெள்ளியம்பாளேயம், பீக்கர்பாளேயம், சிக்கரசம்பாளேயம் போன்ற ஊர்களிலிருந்தும் குடியானவர்கள், தங்கள் மாடுகளே மேய்ப்பதற்கு அந்த மலேப்பகுதிக்கு ஓட்டி வருவார்கள். உடனே திரும்ப முடியாததால் அங்கேயே மாடுகளுக்குப் பட்டிகள் அமைத்துத் தங்கியும் வந்தார்கள்.

வெள்ளியம்பாளையத்தைச் சேர்ந்த தனகார போரப்ப கவுண்டர் என்பவர் ஒருநாள் தன்னுடைய காராம் பசுவைக் காணுமல் வனப்பகுதியிலெல்லாம் தேடியலேந்தார். அவருக்குத் துணையாக மற்றவர்களும் சென்ருர்கள். பல இடங்களில் தன் பசுவைத் தேடிக் களைத்த போரப்ப கவுண்டர் மலையடிவாரத்தின் எல்லையருகே வந்ததும் திடுக்கிட்டு நின்ருர். அவர்முன் அங்கு தோன்றிய காட்சி அவரை அவ்வாறு மலைப்புற்று அதிர்ச்சிக்குள்ளாக்கியது...

## 5

முல்லை ஒருபாத்தி, முல்லை பூக்கும்பூ ஆயிரமாம், என்
அம்மாவுடை வாசலிலே,
பிச்சி ஒருபாத்தி, பிச்சி பூக்கும்பூ ஆயிரமாம்!
முல்லை பிச்சி மலர் சூடும் எங்கள் முத்தழகு மாரிக்கு
பாலோ அபிஷேகம்: பழம்தேனே வரிசைகளாம்!
பொன்மாரி விண்மாரி பூத்ததொரு அருள்மாரி!
பாசாங்குச மெடுத்துப் பாராண்ட ஈஸ்வரியே!
நீராண்ட தேசமெங்கும் நீயாண்டாய், கண்மலர்ந்து!

—மாரியம்மன் பாமாலை

நீரும்—நெருப்பும் கொண்டதுதான் இந்தப் பூமி; நீருள்ள அளவு நெருப்பும் உண்டு இங்கே!

இஃதன்றி அண்ட வெளியுலுள்ள எண்ணற்ற கோடிக் கிரகங்களும், நட்சத்திரங்களும் நெருப்புக் கோளமாகவே தகித்துக் கொண்டிருக்கின்றன.

இவ்வாறு அண்டமே நெருப்புக் கோளமாக இருக்கும் போது, அந்த அகில அண்டங்களுக்கும் ஈஸ்வரியான - அகிலாண்டேஸ்வரியான பராசக்தி உக்கிர தேவதையாகவும் ஓங்கார சொரூபிணியாகவும் சுடர்விட்டு நிற்பது வியப்பா?

காளியாய், நீலியாய், கொற்றவையாய், துர்க்கையாய் துஷ்ட நிக்கிரஹ சொருபிணியாய் அவள் உக்கிரம் கொண்டு எழுந்தருளியிருப்பதைக் கண்ட பக்தர்கள்—

''துஷ்டர்களை தான் அடககும் சூலி கபாலியம்மா.
அடங்காத மானிடரை அடிமைபலி கொண்ட சக்தி,
மிஞ்சி வரும் ராட்சதரை வெட்டி விருந்துண்ட
கண்ணே,
அனலம்மா உன் சொருபம் ஆஸ்தான மாரிமுத்தே!
கனலம்மா உன் சொருபம் தரிக்கமுடி போகாது!

அண்டா நெருப்பேயம்மா ஆதி பரமேஸ்வரியே''
—என்று அவளைத் துதித்து மெய்யொடுங்கியப் பாடி நிற்பார்கள்.

அத்தகைய உக்கிர நாயகியான பராசக்தி பண்ணாரி திருத்தலத்தில் சாந்த சொருபியாக அமர்ந்து அருள் புரிகிறாள்.

இந்த அதிசயம் எப்படி நடந்தது...?

சுயம்புவாய் பண்ணாரி திருத்தலத்தில் எழுந்தருளி பாராள்வதற்கு எம்பராசக்தி சித்தம் கொண்டு தோன்றிய போது, அவளை முதன்முதலாகத் தரிசித்தது சாதாரண மனிதர்களல்ல. மனிதர்கள் என்றால்- பஞ்ச பூதங்களாலும், காமக் குரோதம் போன்ற பஞ்சமா பாதக பழிபாவங்களுக்கு இலக்காகிய ஜீவர்கள்தாம்!

அன்னையை தரிசித்ததோ அவ்வாறு பஞ்சமா பாதங்களுக்கு உட்பட்ட மனிதர்களல்ல! பாதகங்களுக்கும் பாவங்களுக்கும் அப்பாற்பட்ட ஒரு தாய்தான் அவளை முதன் முதலாக இந்தப் பூமியில் இனங்கண்டு கொண்டவள்.

உலகையே பாலூட்டிப் பராமரிக்கும் அந்தத் தாய் வேறு யாருமில்லை; 'பசு' என்னும் 'கோ' மாதாதான்!

ஆம்; பூமியில் சுயம்புவாக் பண்ணாரி மாரியாத்தா தோன்றியபோது,கோமாதாதான் அவளை முதலில் தரிசித்து

அன்னையின் மூர்த்திகரமான சொருபத்தில் தன் பாலைச் சொரிந்து அவளை வரவேற்ருள்.

பிறக்கும் குழந்தைக்கு முதலில் முலைப்பாலூட்டி ஆதரிப்பவள் அன்னையல்லவோ!

லோகத்துக்கே தாயான பண்ணரி பாரியம்மாவுக்கும் தாயாகி நின்றவள் கோமாதா!

சாந்த சொருபிணியாய அந்த கோமாதாவின் தூய்மை யான அமுதத்தைத் தன் மேனியில் முதன்முதலாக சொரியப் பெற்றதாலோ என்னவோ, பராசக்தி, பண்ணரி திருத்தலத்தில் சாந்த சொருபிணியாக அமர்ந்திருக்கிருள்!

அன்று வெள்ளியம்பாளையம் தனகார போரப்பக் கவுண்டர் கண்டு அதிசயித்த காட்சி, தன்னுடைய பசு அம்மாவின் தலையில் பாலைச் சொரிந்து கொண்டிருந்தது தான்! கணுங்குப்புல் அடர்ந்திருந்த புதரின் நடுவில், ஒரு புற்றின் அருகில் மூர்த்திகரமாக எழுந்திருந்த திருவுரு வத்தில் பசு தானுகப் பாலைச் சொரிவதைக் கண்டும், அங்கே என்ன அதிசயம் நிகழ்கிறது என்பதைப் பசுவின் சொந்தக் காரர்களும்—நண்பர்களும் அடையாளம் அறிந்து கொள்ள வில்லை.

இந்த அதிசயத் திருக்காட்சிக்கு விளக்கம் பெற முடி யாமல் உடனடியாக அச்செய்தியை வெள்ளியம்பாளையம், சித்தரசம்பாளையம் முதலிய ஊர்வாசிகளுக்கும்- மற்றும் அருகிலிருந்த சிற்றூர் மக்களுக்கும் தெரியப்படுத்தினர்-

உடனே அப்பகுதி பெரியதனக்காரர்களும், மக்களும் கூட்டமாகத் திரண்டு வந்து அந்த அதிசயக் காட்சியைத் தரிசித்தனர். அவர்களுக்கும் அந்த மகிமையின் உட்பொருள் புரியவில்லை.

அச்சமயம் பீக்கர்பாளையத்தைச் சேர்ந்த நஞ்சப்ப கவுண்டருக்கு திடீரென்று தெய்வ ஆவேசம் உண்டாகியது.

அவர் வாயிலாக, 'அங்கு எழுந்தருளியிருக்கும் தான் மாரியம்மன்' எனவும், 'மக்களைக் காக்க எல்லைத் தெய்வமாகத் தான் எழுந்தருளியிருப்பதாக'வும் தேவியின் அருள்வாக்கு பிறந்தது.

அந்தக் கணமே ஆனந்தப் பரவசமுற்ற அந்த மக்கள் கோலாகலம் பொங்க, பச்சிலைகளை வெட்டி ஒரு பந்தலாக அமைத்து, மாரியம்மாவை 'பண்ணாரி மாரியம்மன்' என்று பெயரிட்டு வழிபடத் தொடங்கினர்.

அன்று பச்சிலைப் பந்தலின் கீழ் அமர்ந்த பராசக்தியின் ஆலயம் இன்று பல லட்ச மக்கள் வந்து தொழுது அருள் பெறத்தக்க வகையில் புகழ் பெற்றதாக—பல லட்சங்கள் வருமானம் வரக்கூடிய ஆலயமாக வளர்ந்திருக்கிறது. 'பண்ணாரி' என்பது—'பண் மாரி' என்பதன் திரிபு என்கிறார்கள். (பண்—இசை. ஆத்மாக்களின் ஜீவ இசையின் ஆதாரசக்தியாக அன்னை திகழ்கிறாள் அல்லவா!)

அம்மையை முதன்முதலில் புதரில் தரிசித்த பசுவின் சொந்தக்காரரான போரப்பக் கவுண்டரின் உருவம், இன்றைய ஆலயத்தின் மூலஸ்தானத்திற்கு முன்புறமாக இருக்கும் மண்டபத்தில் ஒரு மூலையில் அமைக்கப்பட்டிருக்கிறது.

அன்னையின் அருளிருக்கையை தெய்வ ஆவேசம் கொண்டு அருள்வாக்காக விளம்பிய பீக்கர்பாளையம் நஞ்சப்பக் கவுண்டரின் குடும்பத்திற்கும் சந்ததியருக்கும் இன்றும் 'தேவராட்டிக் குடும்பம்' என்ற பெயர் வழங்கப்படுகிறது.

பண்ணாரித் திருத்தலத்தில் நம் மாரியாத்தா வந்து அமர்ந்ததற்கு இன்னொரு செவிவழி வரலாறும் கூறப்படுகிறது—மலையாளத்தில் வண்ணாரக்காடு என்ற ஊரிலிருந்து மைசூருக்குப் போக இந்த வனத்தின்வழியே சில வியாபாரிகள் பொதி மாடுகளில் வியாபாரத்துக்கு வேண்டிய பொருள்களை ஏற்றி வந்து, ஓர் இரவு அவ்விடம் தங்கினார்

கள் என்றும், அப்போது ஒருவருடைய கனவில் அம்பாள் தோன்றி, 'அன்பர்களே! நான் உங்களுடனேயே துணையாய் வந்தேன். இங்கே பண்ணாரி மாரி என எழுந்தருளியுள்ளேன். யாவரும் என்னைப் பணிந்து சென்று உங்கள் வியாபாரத்தைச் செய்யுங்கள்' எனக் கூறியதாகவும் சிலர் கூறுகின்றனர்.

ஃ ஃ ஃ

எல்லையற்ற பேரருள்தேவியான பண்ணாரி மாரியம்மன் அந்த எல்லையில் கோயில் கொண்டதற்கு இப்படி இரு செய்திகள் கூறப்பட்டாலும், கருத்து பேதத்துக்கு இடமில்லாத ஓர் அரிய தெய்வீக வரலாறு அன்றும் இன்றும் அத்தலத்தில் உண்டு...

அதுதான் பண்ணாரி மாரியாத்தா இந்த மண்ணில் வாழ் மாந்தருக்கு தம் கண்ணுதல் கருணை வெள்ளத்தால் அருள்புரிந்து உய்விக்கும் புனிதப்பெரும் வரலாறு!

அவள் சந்நிதியில் புதிது புதிதாக மனிதர்கள், புதிய புதிய செய்திகளுடனும்— அன்னையின் மகிமைப் பிரதாபங்களைப் பற்றிய தகவல்களுடனும் தொழுது நிற்பதைக் கண்ணுற்றபோது, பண்ணாரிப் பெருந்தாயின் 'அருளுக்கு ஈடுதான் ஏது, இணைதான் ஏது?' என்று மெய்சிலிர்த்து நிற்கிறோம்!

அதோ! அம்மாவின் சந்நிதியில் நாலைந்து இளைஞர்கள் அம்மனைத் தொழுதுவிட்டு உற்சாகமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். 'அவர்களுடைய உற்சாகத்துக்குக் காரணம் என்ன?' என்று விசாரிக்கிறேன்...

அவர்கள் — திருப்பூர் எம். ஆர். ஏ. பரமசிவமும் அவருடைய பங்காளி திருப்பூர் ரவிச்சந்தரும் — உடன் வந்த நண்பர்களுமாம்.

சொந்தமாக கார் வாங்கியிருக்கிறார்களாம். K.L.G. 2096 எண் கார். முதன் முதலில் அந்தக் காரில் பண்ணாரி

அம்மா சந்நிதிக்கு வந்து பூஜை செய்ய வந்திருக்கிறார்கள். அவர்களுடைய ஒவ்வொரு வளர்ச்சிக்கும் ஆதாரசக்தி பண்ணாரி மாரியம்மாதானாம்! சுமார் இருபது வயது பிராயம்தான் இருக்கும், அந்த இளைஞர்கள் ஒவ்வொரு வருக்கும். அவர்கள் முகத்தில் பளபளத்த பக்திச்சுடர் என்னை வியக்க வைத்தது. நாகரிக உடையணிந்து காணப்படும் அந்த இளைஞர்கள் கூறிய இன்னொரு செய்தி... பண்ணாரித் தலத்தில் மிகப் பிரபலமான தீக்குண்டத் திருவிழாவில் வருடா வருடம் தவறாமல் கலந்து கொண்டு தீ மிதிப்பார்களாம் அவர்கள்!

இதோ! தர்மபுரி மாவட்டத்தில் உள்ள பாலக்காடு என்ற ஊரில் உள்ள அரசினர் ஹயர் செகண்டரி பள்ளியின் ஆசிரியையாய் இருக்கும் கே. பாக்கியம் எம்.ஏ. என்ற பெண்மணி அன்னையின் சந்நிதியில் மெய்யுருகி நிற்கிறார். அவருக்கு சொந்த ஊர் சத்தியமங்கலமாம்.

இப்போது பாலக்காட்டிலிருந்து தேவியைத் தரிசிக்க பண்ணாரிக்கு வந்தாராம். தொலைதூரத்திலிருந்து தேவி யின் நினைவாக வரும் அளவு அன்னைமீது ஈடுபாடு ஏற்பட்ட தற்குக் காரணம், அவர் எண்ணியவாறு அவருக்கு வேலை, கிடைக்க தேவி அருள் புரிந்ததோடு, இன்றளவும் மனதுக்கு எவ்வித வேதனையும் அளிக்காமல் அமைதி அளித்து அவரைக் காத்து ரட்சித்து வருவதுமே!

அவர் கூறிய இன்னொரு தகவல் எனக்கு சுவை யாகத் தோன்றியது. அந்தப் பெண்மணி பெரியார் ஈ. வெ. ரா வின் உறவினராம். ''பெரியாரின் நாத்திகக் கருத்துக்களை ஏற்றுக் கொள்ளாமல் தேவியைத் தரிசனம் செய்ய வந்திருக்கிறீர்களே?'' என்று கேட்டேன் நான்.

அதற்கு அவர் கூறிய பதில்: ''பெரியார் அவர்களின் கொள்கைகளும் எனக்குப் பிடிக்கும். ஆனால், அதேசமயம் தேவியின் அருளும் எனக்குத் தேவை'' என்கிறார்.

கல்லுக்குள்ளேயும் ஈரத்தை உண்டாக்கினர் பரமேஸ்வரன்! லோகநாயகியான இந்தப் பராசக்தியோ, கடுமையான எதிர்ப்புக் கருத்துக்கள் அடர்ந்திருந்த உள்ளத்துள்ளும் ஒரு ஒளியாய் தன்னை ஒளிரச் செய்து திகழ்கிருள்.

அன்னையின் ஆலயத்தைச் சுற்றி வந்தபோது மண்டபத்தில் பளிச்சிட்ட ஒரு வாசகத்தைக் கண்டபோது என் மனதுக்குள் ஒரு புன்னகை தோன்றியது...

## 4

காயாம்பூ மேனியம்மா, கார்வண்ணன் தங்கையரே!
நீயாளும் பூமியிலே நெருப்பெலாம் மலர் சொரியும்!
மண்ணோ நாலுவகை, மண்ணுள்ளோர் கோடிவகை!
கண்ணால் இவையாளும் பண்ணாரியம்மா, நின்பார்வைதான்
ஏதுவகை!
அல்லூரும் பொல்லூரும் ஆகாத்தியம் பண்ணுகையில்,
நல்லூரில் கோட்டைகட்டி நாடாள வந்தவளே!
எல்லைக்கு அரசாணி, நீ எதிர்ப்பவர்க்கு மார்பாணி!
பொல்லாங்கு கருவறுத்து உன் பொற்கழல்கள்
சங்கொலிக்கும்!

—மாரியம்மன் பாமாலை

மலர்ச் சோலைக்கும் விளம்பரம் தேவைப்படும் காலம் வந்துவிட்டதா, என்ன?

அந்த விளக்குக் கூண்டைப் பார்த்ததும் எனக்கு அப்படியோர் வியப்பு தான் தோன்றியது.

அண்டபுவனுதிகளுக்கெல்லாம் நாயகியாய், அனைத்துக் கோடி ஜீவராசிகளுக்கும்—அவர்தம் அசைவுகளுக்கும் அதிபதியாய், அனாதி காலமாய் எல்லையற்ற அமுதக் கருணை சுரந்து, ஒவ்வோர் அணுவிலும் வியாபகமாக இருக்கும் அந்த ஆதிபராசக்தி சந்நிதியில் விளம்பரமா? யாருக்கு? ஆலய

மண்டபத்தில் தென்பட்ட ஒரு விளக்கில் ஒரு பிரபல திரைப் பட நடிகரின் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. இது அம்மனின் அருளைப் பெறும் பாக்கியத்தை அந்த நடிகர் பெற்றிருக்கிறார் என்பதற்கு விளம்பரமா, அல்லது அந்த நடிகர், அம்மனின் ஆலயத்துக்கும் திருப்பணி சகாயம் செய்திருக்கிறார் என்பதற்கு விளம்பரமா...?

எதுவென்று புரியவில்லை! ஆனால், பண்ணாரி மாரியம் மாவின் பேரில் சில திரைப்பட நட்சத்திரங்களும், தயாரிப் பாளர்களும் கொண்டிருக்கும் ஈடுபாட்டையும்—அவர்கள் செலுத்தியிருக்கும் காணிக்கைகளைப் பற்றியும் சற்று உற்சாகமாகவே விவரிக்கிறார்கள் ஆலயத்தைச் சார்ந்த வர்கள்...

சென்னையில் வாழும் அந்த திரைப்பட நட்சத்திரங்கள் பண்ணாரி அருகேயுள்ள 'தெங்குமராட்டா' என்ற பகுதிக் கும்—அருகிலுள்ள வேறுசில இடங்களுக்கும் படப் பிடிப்புக்காக வந்தபோது, பண்ணாரித்தாயின் பேரருளால் ஈர்க்கப்பட்டு அன்னையின் பக்தர்களானார்களாம்.

'அன்னக்கிளி' படப்பிடிப்புக்காக வந்தபோது நடிகை சுஜாதா இந்த அம்பாளைத் தரிசித்து, 'வைரமூக்குத்தி' காணிக்கை செலுத்துவதாக வேண்டிக்கொண்டிருந்தாராம். பின் தன் கணவருடன் வந்து அந்தக் காணிக்கையைச் செலுத்திவிட்டுச் சென்றாராம். பிரார்த்தனை செய்யும்போது அவருக்குத் திருமணமாகியிருக்கவில்லை. காணிக்கை செலுத்தும்போது அவருடைய விருப்பப்படி திருமணமாகி யிருந்தது. வைரமூக்குத்தியோடு, கேரளபாணியில் அமைந்த நாலிலை குத்துவிளக்கும் அளித்தாராம்.

'அன்னக்கிளி' படஅதிபர் சுப்பு ஒரு வைரமூக்குத்தி பரிசளித்தாராம்.

''அந்தப் படம் வெளியானதும் சுமாராகத்தான் ஓடியது. அம்மனுக்கு தன் பிரார்த்தனையை படஅதிபர் செலுத்திய வாரத்திலிருந்து படம் பிரமாதமாக ஓடியது''

என்று அதைப்பற்றி கூறுகிறார் சத்தியமங்கலத்தைச் சேர்ந்த திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி.

நகைச்சுவை நடிகர் தேங்காய் சீனிவாசன் ஒரு விளக்குக் கூண்டைக் காணிக்கையாகச் செலுத்தியிருக்கிறார். கே. ஏ. தங்கவேலு கல்யாணமேடை அமைத்துக்கொடுத்திருக்கிறார்.

திருவிழாச் சமயங்களில் ஆலயத்துள் பயன்படுவதற்கு 'ஏர்கூலர்' அளித்திருக்கிறாராம் ஸ்ரீப்ரியா.

—இப்படி நீளமாகப் பட்டியல் தெரிவிக்கிறார்கள்.

அத்தோடு, ஒரு நகைச்சுவை நடிகர் பூஜை வேளையில் ஒரு நாள் ஆலயத்துக்கு வந்து மண்டபத்தருகே நின்று பார்த்து விட்டு, தன்னை யாரும் கவனிக்கவில்லை என்றதும் வேகமாகப் போய்விட்ட செய்தியையும் அங்கு தெரிவித்தார்கள். யார் யாரைக் கவனிக்க வேண்டும் என்று அவர் எதிர் பார்த்தாரோ...?

எந்த சந்நிதியில் இந்த சிந்தனைகள்!

பட அதிபர் ராஜ்கண்ணு தன் படங்களின் ஆரம்பத்தில் பண்ணாரி மாரியம்மனின் படத்தையும் இடம்பெறச் செய்வாராம். அவர் அந்த ஆலயத்துக்கு வந்து அன்னையிடம் சரணடைந்த செய்தியை நெகிழ்ச்சியோடு விவரித்தார். ஆலயத்திலுள்ள அர்ச்சகர்களின் ஒருவரான என். ராஜலிங்க குருக்கள்.

சுமார் மூன்று வருஷத்துக்கு முன் ஒரு நாள். இரவு ஏழரை மணி இருக்கும். கோயில் நடைசாத்த வேண்டிய நேரம்.

ஒரு காரில் ராஜ்கண்ணு வந்து இறங்கி, மிகவும் சுகவீன மான நிலையில் தளர்ச்சியுடன் மண்டபத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு, அம்பாளுக்கு அபிஷேகம் செய்யும்படி வேண்டிக் கொண்டாராம்.

அப்போது கூடவே அவர் குருக்களிடம், ''எனக்கு ரொம்பவும் சுகமில்லாமல் இருக்கிறது. வைத்தியம் செய்து

பயனில்லை. பண்ணாரி மாரியம்மனைப்பற்றி மிகவும் சிறப்பாகச் சொல்கிறார்கள்...அம்பாளிடம் வேண்டி விரதமிருந்தால் குணமாகி விடுமா...?'' என்று ஆதங்கத்துடன்கேட்டாராம்.

''நாற்பத்தெட்டு நாள் அம்மனை நினைத்து விரதம் இருங்கள்...குணமாகிவிடும். உங்கள் வீட்டில்கூட இருக்கலாம்!'' என்றாராம் குருக்கள்.

அன்று அபிஷேகம் முடித்துக்கொண்டு சென்ற ராஜ்கண்ணு, மீண்டும் இரண்டு மாதம் கழித்துத் திரும்பி வந்தாராம்.

இப்போது அவர் உடல்நலம் தேறி மலர்ச்சியுடன் காணப்பெற்றாராம்.

''நீங்கள் சொன்னபடியே அம்மனை நினைத்து விரதமிருந்தேன். குணமாகி விட்டது. அம்பாளுக்கு நான் என்ன காணிக்கை செலுத்த வேண்டும்?'' என்று கேட்டாராம்.

குருக்கள், ''அபிஷேகம் செய்ய ஒரு வெள்ளிச் சொம்பு வேண்டும்!'' என்று கேட்டாராம்.

அடுத்த வாரமே, ஒரு வெள்ளிச் சொம்பை வாங்கி வந்து கொடுத்தாராம் ராஜ்கண்ணு.

ஆனால், அது வழக்கமாகக் கோவில்களில் அபிஷேகத்துக்கு உபயோகிக்கப்படுவதுபோல் அமையவில்லையாம்.

அதனால், ''இதைக் கடையில் கொடுத்துவிட்டு வேறு மாதிரி வாங்கித் தந்தால் நன்றாக இருக்கும்!'' என்று குருக்கள் கூறினாராம்.

''அம்மனுக்கு இப்போது கொடுத்ததும் இருக்கட்டும். இன்னொன்றும் நீங்கள் சொல்கிறபடி வாங்கித் தருகிறேன்'' என்று, இன்னொரு வெள்ளிச் சொம்பும் வாங்கி அளித்தாராம் ராஜ்கண்ணு.

இதைத் தெரிவித்த குருக்கள், ''அவர் இருக்கப்பட்டவ ரானதால், அம்பாள் அவரிடம் இரண்டு சொம்பு வாங்கி விட்டாள்!'' என்ருர் சிரித்துக் கொண்டே.

அவள் சந்நிதியில் 'இருப்பவர்கள்' யார், 'இல்லாதவர்' யார்?

அவள் கொடுத்தால் இல்லாதவரிடம் இருக்கும்; அவள் எடுத்துக் கொண்டால் இருப்பவர்கள் இல்லாதவர்களாகி விடுகிருர்கள்! பாத்திரத்தில் பாலை ஊற்றினுல் அது பால் கிண்ணம். பாலை எடுத்துவிட்டால் அது வெறுங்கிண்ணம்! பால் இருப்பதுவும், இல்லாமலிருப்பதும் கிண்ணத்தின் பெருமையோ, குறையோ இல்லை. கிண்ணம் வெறுமனே ஏந்திக் கொள்வதுதான். அதில் ஊற்றுபவர் யாரோ! குடிப்பவர் யாரோ! கொட்டுபவர் யாரோ! இதனுல் மனிதன் என்ற கிண்ணத்துக்கு என்ன பாதிப்பு...? ஒன்றுமே யில்லை!

அதோ! பண்ணுரித் தாயின் சந்நிதியில் பூஜை செய்யும் இன்னெருவர் பொம்மப்பன்—செல்வம் என்று எதையும் சேர்த்து வைத்தவரல்ல. ஆனுலும், ஏராளமான பொருட் செலவு செய்து ஒருவர் செல்லக்கூடிய அமெரிக்காவில் உள்ள நியூயார்க் நகருக்கு அவரைச் செல்லச் செய்தாள் அம்பாள்.

''நான் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத இடம் அது. அம்பாள் சூலடியிலே நான் பணிவிடை செய்து கொண் டிருந்த ஒரே காரணத்துக்காகத்தான் என்னை அவள் அந்த நாட்டுக்கு அவ பெருமையைச் சொல்றதுக்கு அனுப்பி வைத்தாள்...!'' என்று மனம் கசிந்து கூறுகிருர் பூசாரி பொம்மப்பன்.

சிவானந்த ஆசிரமம் சார்பில் நியூயார்க் அருகே 150 மைல் தொலைவில் ராஜராஜேஸ்வரி அம்மன் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறதாம். அதற்கு சில நாட்கள் பூஜை செய்து—பூஜா முறைகளை அங்கிருப்பவர்களுக்குக் கற்பித்துத்

தருவதற்கும் பொம்மப்ப பூசாரியை அழைத்துச் சென்ருர்களாம். அங்கு சென்று அம்மன் பிரதிஷ்டை ஆனது முதல் 27 நாட்கள் வரை அம்மனுக்குப் பூஜை செய்தாராம். திரு. பொம்மப்பன். அதோடு பண்ணுரித் திருத்தலத்தின் சிறப்பு மகிமையான தீக்குண்ட விழாவையே அமெரிக்காவில் நடத்திக் காட்டிஞராம்!

அதைக்கண்ட அமெரிக்கர்கள் மத்தியில் ஒரு விசித்திர மான சந்தேகம் ஏற்பட்டதாம்...

## 5

தாயே நீ வாருமம்மா! தற்பரையாய் நின்ற சக்தி!
வாக்கிட்டால் தப்பாது வரங்கொடுத்தால் பொய்யாது!
பொய்யாது பொய்யாது, பூமலர்கள் பொய்யாது!
பூவிரண்டு பூத்தாலும் நாவிரண்டு பூக்காது!
கண்பாரும் கண்பாரும் கனகவல்லி தாயாரே!
வேம்புரதவேறி வித்தகியே வாருமம்மா!
பச்சிலை ரதமேறி பார்வதியே வாருமம்மா!
பண்ணுரி தலமேவி பார்காக்க நின்ற சக்தி!

—மாரியம்மன் பாமாலை

அறிவும்—அகல்விளக்கும் ஒன்று!

அகல்விளக்கைச் சுற்றியும் பிரகாசமாக இருக்கும்; மனித அறிவைச் சுற்றியும் பிரகாசமாக இருக்கும்.

ஆனல் இந்த பிரகாசத்துக்கு ஓர் எல்லையுண்டு.

அகல்விளக்கின் ஒளி ஒரு குறிப்பிட்ட தூரம் வரைதான் பரவி நிற்க முடியும்.

அதைப்போலத்தான் மனிதனுடைய அறிவும்—பகுத்தறிவும். இறைவனுடைய விசித்திரங்களையும்—திருவிளையாடல்களையும் ஒரு குறிப்பிட்ட எல்லை அளவு வரைதான்,

மனிதன் தன் அறிவாலோ, பகுத்தறிவாலோ உணர முடிகிறது.

எப்படி ஒரு குறிப்பிட்ட விளக்கு வெளிச்சத்தில் ஒரு மனிதன் தான் பார்ப்பதை வைத்து, 'அதுதான் உலகம்' என்று பேதமையோடு நினைக்கிறானோ, அதைப்போல்தான் அவன் தன் அறிவைக் கொண்டு புரிந்துகொள்ளக்கூடிய விஷயத்துக்கு மேல் எதுவுமே இல்லையென்று நினைப்பதும்.

தேவ தேவியரின் சிருஷ்டி மர்மங்கள், திருவிளையாடல்கள் யாவும் எந்த ஒரு மனிதனின் கணிப்புக்கும், அறிவுக்கும், பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்டது.

அதனால்தான் பண்ணாரி மாரியம்மாவின் தீக்குண்ட வைபவத்தை அமெரிக்காவில் உள்ள மக்களால் சற்றும் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஆமாம்; விஞ்ஞான முயற்சியால் விண்வெளியை ஆய்ந்து கிரக சஞ்சாரம் செய்யும் அளவு முன்னேறிய அந்த நாட்டவரால், இந்த மெய்ஞ்ஞான சூட்சுமத்தின் தத்துவங்களைப் புரிந்துகொள்ள முடியவில்லை!

பராசக்தியின் திருவிளையாடல்களைப் புரிந்து கொள்ள யாருக்குத்தான் சக்தியுண்டு! அதைப் புரிந்துகொள்ள முயல்வது நம் வேலையல்ல...

காற்று எப்படி உற்பத்தியாகிறது என்று தெரிந்து கொண்டா மனிதன் சுவாசிக்கிறான்? அவன் கடமை காற்றை சுவாசித்து பயன் பெறுவது மட்டும்தான்.

அதுபோல் தேவியின் அருளைத் தன் புலன்களால் உணர்ந்து பயன் பெறுவது மட்டும்தான் மனிதர்களுக்கு—ஜீவ கோடிகளுக்கு சாத்தியமான விஷயம்.

அமெரிக்காவில் பூசாரி பொம்மப்பன் தீக்குண்டம் வளர்த்து, அதில் நடந்து சென்றதும்—அத்தனைப் பேரும் அந்த பூசாரியின் காலைப் பரிசோதித்து, நெருப்புக்குப் பாது

காப்பாக ஏதாவது தடுப்பு மருந்து பூசியிருந்தாரா என்று சோதித்தார்களாம்!

'அப்படி ஒன்றும் இல்லை' என்று தெரிந்ததும், தாங்களும் அப்படி நடந்து பார்க்கலாமே என்று அந்த தீக் குண்டத்துக்குள் காலை வைத்துப் பார்த்தார்களாம். அடுத்த விநாடியே கால் சூடுபட்டு பதறி துடித்துக்கொண்டு வெளியே ஓடிவந்து விட்டார்களாம்!

இலேசாகக் கால் பட்டதுமே சூட்டினால் அவர்கள் காலெல்லாம் கொப்புளமாக ஆகிவிட்டது. ஆனால் பூசாரி யின் கால்களோ சாதாரணமாகத்தான் இருந்தன.

காரணம், அந்த தீக்குண்டத்தில் நடந்து செல்லும் சக்தி நடந்து செல்லும் மனிதனின் கால்களில், இல்லை; நெஞ்சில் இருந்தது.

ஃ ஃ ஃ

பண்ணாரி திருத்தலத்தில் மிகவும் சிறப்பான திருவிழா தீக்குண்டம் திருவிழாதான். அந்தப் பகுதியிலுள்ள மக்களில் பெரும்பாலோர், தாம் அத் தீக்குண்டத்தில் இறங்கி அம்மனின் அருளுக்குப் பாத்திரமாகி இருப்பதாகப் பெருமைப்படக் கூறுகிறார்கள்.

இத்தலத்தில் நடக்கும் அந்த தீக்குண்ட பெருவிழாவின் மகிமையைப் புரிந்துகொள்ள முடியாத சிலர் அனுபவித்த சில சிரமங்களைப் பற்றியும் அத் தலத்தில் செய்தி கிடைக் கிறது.

ஒருமுறை அம்பிகைக்கு வழக்கம்போல் அக்கினிகுண்டம் வளர்த்து திருவிழா நடத்துவதற்கு மக்கள் எத்தனித்த போது, அப்போது காட்டிலாகா பொறுப்பிலிருந்த ஆங்கில அதிகாரி ஒருவரால் ஒரு சிரமம் ஏற்பட்டதாம்—

தீக்குண்டத்திற்கு அருகிலுள்ள வனத்திலிருந்து மரங் களை வெட்டிக்கொண்டு வந்துபோடுவது எப்போதும்

வழக்கம். இந்த மரங்களைக் 'கரும்பு' என்றும், தீப்பொறி களை 'பூ' என்றும் சொல்லுவார்கள். அந்த ஆங்கில காட்டி லாகா அதிகாரி குண்டத்தில் போட மரங்களை வெட்டக் கூடாது என்று தடுத்துவிட்டார். அதனால் தீக்குண்டம் ஏற் படுத்த நேரம் அதிகம் ஆனதோடு, திருவிழாவுக்கும் தடங்கல் ஏற்பட்டது. உடவே தேவியின் அருட்பார்வையால் அந்த அதிகாரிக்கு வாந்தி பேதி கண்டு துன்பமுற்று, கோவிலுக்குச் சொல்லியனுப்பி, தீர்த்தம் — விபூதி தருவித்து அணிந்துகோண்டு தேவியைப் பணியவும், வாந்தி பேதியும் குணமடைந்ததாம். அவர் மனம் மாறி, உடனே தீக்குண்டத்திற்குக் 'கரும்பு' வெட்டுவதற்கு அனுமதி கொடுத்தார். திருவிழாவும் வழக்கம்போல் நடந்ததாம்.

வேறோர் ஆண்டில் ஓர் ஆங்கில அதிகாரி—பிரயாணிகள் விடுதியில் தங்கியிருந்தவர், கோயிலில் வழக்கமாக நடக்கும் மேளதாளங்கள், ஆடல் பாடல்கள் முதலியவைகளை நடக் காமலிருக்கக் கட்டளையிட்டாராம். அதனால் கொஞ்சநேரம் ஆடல் பாடல்களையும் மேள தாளங்களையும் நிறுத்தினராம். அக்கணம் பாம்பணிந்த இரு பெண்கள் மகுடிக் குழல் பிடித்த கையினராய் அந்த அதிகாரி முன் தோன்றினராம், அவ்வதிகாரி பயந்து, தான் கட்டளையிட்டது பெருந் தவறென உணர்ந்து தேவியைப் பணிய, அப்பெண்கள் மறைந்தனர். அதன்பின் மேளதாளங்கள் முழங்க திருவிழா இனிது நடந்ததாம்!

இத் தீக்குண்ட விழாவின் அமைப்பு பற்றி ஆலய நிர்வாக அதிகாரி கூறியதகவல்கள்...

ஆண்டுதோறும் பங்குனி மாதத்தில் உத்திர நட்சத் திரம்—அதாவது பௌர்ணமிக்கு முந்தின பதினைந்தாம்நாள் திங்கட்கிழமை (அமாவாசைக்கு அடுத்த திங்கட்கிழமை. இது சில ஆண்டுகளில் முன்பின்னாக வரும்) இரவு—சிக்கரன் பாளையம், சிக்கரசன்பாளையம், புதூர், வெள்ளையம்பாளையம் முதலிய ஊர்வாழ் பெரியதனக்காரர்களும், தர்ம கர்த் தாக்

களும், ஆலய அதிகாரிகளும் வந்திருந்து அம்மனுக்கு அபிஷேக அலங்காரங்கள் செய்வித்துப் 'பூச்சாற்று' நடத்து விப்பார்கள்.

பூச்சாற்று நடந்த மறுநாள் தேவியை சப்பரத்தில் எழுந்தருளச் செய்து அலங்கரித்து—சிக்கரசன் பாளையம், வெள்ளியம்பாளையம், சிக்கரன்பாளையம் புதூர், தாண் டாம்பாளையம், சத்திய மங்கலம், இடையில் இன்னும் சில ஊர்களிலும் எழுந்தருளச் செய்து—ஆங்காங்கு வேண்டுதல் காரர்கள் பூசைகள் செய்வித்தும், காணிக்கைகள் செலுத்தி யும் வணங்குவார்கள். அம்மையின் புறப்பாட்டின்போது, 'சோலகர்' என்ற மலைவாசிகளின் வாத்தியங்களும், அருந்ததி இனத்தாரின் வாத்தியங்களும் முழங்கும்.

பூச்சாற்றிலிருந்து ஒன்பதாம் நாள் செவ்வாய்க்கிழமை இரவு—முன்கூறிய பெரியோர்களால் அம்பிகைக்கு ஆரா தனை செய்விக்கப் பெற்று, அன்றிரவு 'அக்கினிக் கம்பம்' போடுவார்கள். அன்றுமுதல் அக்கம்பக்கங்களில் இரவு காலங்களில் சோலகர்களும், அருந்ததியினத்தாரும் தங்கள் தங்கள் வாத்தியங்களை முழக்கி ஆடல் பாடல்கள் இசைப் பார்கள்.

பூச்சாற்றிலிருந்து பதினைந்தாம் நாள் திங்கட்கிழமை பக்தகோடிகள் பல பக்கங்களிலிருந்தும்—பேருந்து வண்டி கள், மிதிவண்டிகள் (சைக்கிள்), மாட்டுவண்டிகள் முதலிய வைகளிலும், பாதசாரிகளாகவும் பல லட்சக்கணக்கில் வந்து கூடுவார்கள்.

இதற்கு முதல்நாள் ஞாயிற்றுக்கிழமை இரவு நிர்வாக அலுவலர், அறங்காப்பாளர்கள் முதலியோர் அம்பிகையின் ஆபரணங்களையும், உற்சவ நாயகியையும் அலங்கரிக்கப் பட்ட சப்பரத்தில் வைத்து, சகலவித வாத்தியங்கள் முழங்க தெப்பக்கிணற்றருகில் உள்ள பள்ளத்தில் எழுந்தருளச் செய்து, அம்மனைப் பூசித்து மீண்டும் கோயிலுக்கு வந்து சேருவர். பெருந்திரளாக மக்கள் கூடுவர்.

திங்கட்கிழமை பெரிய அளவில் குழி வெட்டி தீக்குண்டம் வளர்ப்பர். அனல் வீச்சுடன் தீக்குண்டம் செந்நிறத்தில் தகதகத்துக் கொண்டிருக்கும். அப்போது பூசாரியார் பூசை செய்து முதலில் குண்டத்தில் இறங்குவார். பிறகு வரிசையாக ஆண்களும், பெண்களும் இறங்குவார்கள். அது செவ்வாய் காலை சுமார் 10 மணி வரை நடைபெறும். அதன்மேல் கால்நடைகளும் இறங்கு கின்றன. அன்று நடுப்பகலிலில் பொங்கல், மாவிளக்கு எடுப்பார்கள்.

புதன் இரவு மின்விளக்குகளால் நன்கு அலங்கரிக்கப் பட்ட மலர் ரதத்தில் அம்பிகையை 'எழுந்தருளச் செய்து' நாதசுரக் கச்சேரியுடன் புறப்பாடு நடைபெறும். அன்று அம்மனுக்கு அபிஷேக ஆராதனைகளும், அருந்ததியினத்தார் பொங்கல் மாவிளக்கு எடுப்பதும் நடைபெறும். மகாமுனி வருகையும், இரவில் அக்கினி கம்பம் பிடுங்குதலும் நடை பெறும். கம்பத்தைக் கிணற்றில் விடுவார்கள்.

வியாழனன்று மஞ்சள் நீர் உற்சவமும், திருக்கோயி லாரால் அன்னதானமும் நடைபெறும். அன்று அம்மனுக்கு சிறப்பு அபிஷேக ஆராதனைகள் நடைபெறும்.

தீக்குண்டம் திருவிழா நடந்த எட்டாம் நாள் திங்கட் கிழமையன்று 'மறு பூசை திருவிழா' சிறப்பாக நடை பெறும்.

அடுத்த வெள்ளிக்கிழமையன்று மாலை அம்மனுக்கு 'திரு விளக்கு பூசை' நடைபெறும். இப் பூசையில் ஏராளமான பெண்கள் கலந்து கொள்வார்கள்.

—இவ்வாறு ஆலயத்தில் தீக்குண்டத் திருவிழா நிகழ்த்தப் பெறும் முறை பற்றி நிர்வாக அதிகாரி கூறினார்.

ஆனால் இத் திருவிழாவோ ஆலயத்தார் அமைத்து நடத்தும் திருவிழாவாக மட்டும் தோன்றவில்லை.

அந்த அம்மனே அனைவரின் மனதிலும் குடியேறி, தானே நடத்தி வைக்கும் பக்தி திருவிழாவாகத்தான் தெரிகிறது.

அவைப்பற்றி பக்தர் பெருமக்கள் கூறிய தகவல்களில் தான் எத்தனை எத்தனைவிதமான பரவசமூட்டும் செய்திகள்...! மெய்சிலிர்க்க வைக்கும் அருள் விளையாட்டுகள்...!

## 6

முத்துத்தேர் ஆடிவர என் அம்மாவோட
முற்றமெல்லாம் பொன்சொரிய
முல்லைத்தேர் ஆடிவர என் அம்மாவோட
எல்லையெல்லாம் அருள் சொரிய
தேர்கள் அசைந்து வர தெருவெல்லாம் பேர் முழங்க
பண்ணாரி எல்லையெங்கும் பார்த்த ஜனம் கோடிக்க
மண்ணளந்தோன் தங்கை—எங்கள்
மாரியம்மாள் நடைபயின்றால்,
தூக்கி வைக்கும் கால்களுக்கு
துத்திப்பூ சல்லடமாம்!
தவழ்ந்து வரும் கால்களுக்கு
தாமரைப்பூ சல்லடமாம்!-அம்மா, உன்
ஓடி வரும் கால்களுக்கு எங்கள்
உள்ளப்பூ சல்லடமாம்!

—மாரியம்மன் பாமாலை



இறைவனும்-இறைவியும் இல்லாத இடமேயில்லை! பசுவின் உடலெங்கும் பால் இருந்தும், சுரக்கும் பால் அதன் மடி மூலமே சுரப்பதுபோல், எங்கும் நிறைந்திருக்கும் பரம் பொருளும்-பராசக்தியும் தாம் அருளிருக்கை கொண்டிருக்கும் ஆலயத்திலிருந்து மக்களுக்கு அருள் புரிகிறார்கள் என்பது ஒரு தத்துவம்.

அவ்வாறு அமைந்த ஆலயங்கள் நம் நாட்டில் லட்சோப லட்சமுண்டு; 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டா மெ'ன முதுரையுண்டு.

அப்படியிருந்தும் சில ஆலயங்களில் மட்டும் அபூர்வ ஜீவத்துடிப்பு இருப்பது ஏன்?

காரணம், அந்தக் குறிப்பிட்ட தலங்களில் மற்ற தலங்களைவிட அதிக அளவில் ஜீவாத்மா பரமாத்மா ஈர்ப்பு சக்தி மிக ஜீவத் துடிப்புடன் இருப்பதுதான்...

அதாவது, அங்கு வழிபடும் மக்கள் மனதில் தெய்வம் நின்று பேசுவதுதான்...

பண்ணாரி திருத்தலத்தில் எம் மாரியம்மா அப்படி ஜீவத் துடிப்புடன் மக்கள் மத்தியில் நின்று பேசுகிறாள்!

அங்கு வழிபட வரும் ஒவ்வொரு மாந்தர் மனதிலும்—வாழ்விலும் அவள் ஏற்படுத்தியிருக்கும் பாதிப்புக்கள், நிகழ்த்தியிருக்கும் அற்புதங்கள் ஏராளம் ஏராளம்! அவை யாவும் மறக்க முடியாத பக்திப் பெரும் வரலாறுகள்... அவை குறித்து அப் பண்ணாரி திருத்தலத்தில் பேசப் படுகிறது.

குழந்தையாக, காட்டு யானையாக, சிறுத்தையாக இப்படிப் பல்வேறு உருவங்களில் அம்மா தோன்றி, அசாதாரணமான பயங்கரமும், அதே சமயம் ஆழ்ந்த அமைதியும் கொண்ட பண்ணாரி வனஎல்லைப் பிரதேசத்தில் அன்றும், இன்றும் நடத்தி வரும் அற்புதங்கள்...அம்மம்மா!

திருச்சி சின்னசவுக் பகுதியில் 'அமிருதீன் ஸ்டோரி,ல் இருக்கும் எஸ். ராஜம் தன் அனுபவத்தை கூறுகிறார்:

''சத்தியமங்கலத்திலிருந்து கொள்ளேகாலத்திற்குப் பண்ணாரி வழியாக மலைப்பாதையில் பஸ் போகும் வழியில் 'திம்பம்' என்ற இடம் இருக்கிறது. திம்பத்திலிருந்து ஏழாவது மைலில் கோட்டாடை என்ற கிராமம் இருக்-

கிறது. அங்கு கஸ்தூரிபா சேவா சென்டரில் நான் இருபது ஆண்டுகளுக்கு முன் கிராமசேவிகாவாகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். எனக்கு அப்போது பத்தொன்பது வயதுதான்.

ஒருநாள் சத்தியமங்கலம் சென்று எங்கள் சென்டருக்குத் தேவையான சாமான்களை வாங்கிக்கொண்டு, கொள்ளேகாலம் பஸ்ஸில் வந்து, மாவள்ளம் என்ற இடத்தில் நானும் இன்னொரு சேவிகாவும் இறங்கிக்கொண்டோம். மாவள்ளத்திலிருந்து மூன்றாவது மைலில் எங்கள் கோட்டாடை சென்டர் இருந்தது. (இப்போது இருக்கிறதா இல்லையா என்பது தெரியாது.) ஒத்தையடிப் பாதையில் அடர்ந்த காட்டு வழியாகச் செல்ல வேண்டும். அந்தப் பாதை கொஞ்சம் மாறினாலும் கிராமத்திற்குச் செல்லும் வழியைவிட்டு காட்டிற்குள் போக வேண்டியதாகி விடும்! நடந்து வரும்போது முன்னால் நடந்து கொண்டிருந்த நான் கவனக் குறைவாகக் காட்டுத் தடத்தில் சென்றுவிட்டேன்.

என்னை அறியாமல் அப்படி கொஞ்ச தூரம் சென்றதும் பயம் பிடித்துக் கொண்டது. பாதை மாறி வந்துவிட்டேன் என்பதை அறிந்து கொண்டேன். உடனே 'அம்மா...அம்மா!' என்று அழுவதைத் தவிர வேறொன்றும் தோன்றவில்லை. வழியும் புரியவில்லை. நான் நிற்கும் இடத்தின் இடதுபுறம் பள்ளம். வலது புறம் மலைக்காடு. எதிரில் கொஞ்ச தூரத்தில் ஒரு தனி யானை வருவதைக் கண்டேன். யானை கூட்டத்தோடு இருந்தால் ஒன்றும் செய்யாது என்றும்; தனியான யானையென்றால் ஆபத்தை விளைவிக்கும் என்றும் மலைவாசிகள் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

மேலும் சமீபத்தில், யாரோ வேட்டைக்கு வந்தவர்கள் ஒரு குட்டி யானையை சுட்டுக் கொன்றுவிட்டதாகவும், தாய் யானை கோபம் கொண்டு, காட்டில் திரிந்து வருவதாகவும் கிராமத்தில் நிலவிய வதந்தியும் என் நினைவுக்கு வந்தது. என் எதிரில் அந்த யானைதான் வருகிறது என்ற பயத்தில்,

உயிருக்கு எந்தவித பாதுகாப்பும் அற்றநிலையில்—அந்த மலைப்பிரதேசம் முழுவதும், 'அம்மா...அம்மா...!' என்ற என் குரல் எதிரொலிக்க, பள்ளத்தை நோக்கி பலம் கொண்ட மட்டும் வேகமாக ஓடினேன்.

(அந்தப் பள்ளம் மாவள்ளத்து மக்கள் குடிதண்ணீர் எடுக்கும் பள்ளம் என்பது பிறகுதான் தெரிந்தது). அங்கு தண்ணீர் எடுக்க வந்த பெண்கள் என் குரலைக் கேட்டிருக்கிறார்கள். 'ராஜம்மா குரல்மாதிரி இருக்கிறதே!' என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கும்போதே, நான் ஓடிவருவதைப் பார்த்துவிட்டார்கள்...

அவர்களிடம் பேசவே முடியாத நிலையில், 'ஐயோ அம்மா!' என்று நான் கைகாட்டிய திசையில் சற்று மேட்டுப்பகுதியில் யானை திரும்பிச் செல்வதை எல்லாரும் பார்த்திருக்கிறார்கள். என்னை ஆசுவாசப்படுத்தி ஊருக்குள் அழைத்துச் சென்றார்கள். பின் ஊர்ப் பெரியவர்களிடம் நடந்ததைக் கூறினேன்.

அப்போது அவர்கள் கூறிய செய்தி என்னை மெய் சிலிர்க்க வைத்தது...

'யானை உன்னைத் துரத்தலே அம்மா? உன் ஓட்டத்தைப் பிடிக்க அதற்கு எவ்வளவு நேரம் ஆகும்? அது யானை இல்லே. 'பண்ணாரிதாய்' தான் காட்டுத் தடத்திலிருந்து திருப்பி உன்னை ஊர் கொண்டுவந்து சேர்த்து இருக்கிறார்கள்!

இதேபோல் அந்த மலைப்பிரதேசத்து மக்கள் காடு காக்கவும், மாடுகள் மேய்க்கவும், பெண்கள் விறகு வெட்டவும், காட்டிற்குள் செல்லுவார்கள். அந்த மக்களை ஆபத்திலிருந்து சிறுத்தையின் உருவத்திலும், அசரீரி போன்ற குரலிலும், குடும்பத்தைச் சேர்ந்த பெண் உருவத்திலும் வந்து காப்பாற்றியதாக பல செய்திகள் நிகழந்ததை நான் அறிவேன்'' என்கிறார்.

கொடிவேரி கிராமத்தைச் சேர்ந்த திரு, முத்துராகவலு ஒரு வியப்பூட்டும் செய்தியைத் தெரிவிக்கிறார் :

"சுமார் ஒரு வருடத்துக்குமுன் என் தங்கையைப் பார்க்க கொள்ளேகாலம் போக தீர்மானித்து, சத்திய மங்கலம் சென்று கொள்ளேகாலம் பஸ்ஸில் டிரைவர் ஸீட்டுக்குப்பின் அமர்ந்தேன். டிரைவருக்கு இடது பக்கம் நான்குபேர் அமரும் ஸீட்டில் சுமார் இருபது அல்லது இருபத்திரண்டு வயதுள்ள மூன்று இளைஞர்கள் அமர்ந்திருந்தனர். மூன்றுபேரும் பஸ்ஸிலிருந்த பெண்களைப் பார்த்து விமரிசனம் செய்தும், ரொம்பவும் கீழ்த்தரமாகவும் பேசிக்கொண்டே வந்தார்கள். பஸ் புறப்பட்டு பண்ணாரி மாரியம்மன் கோவில் முன் வந்து நின்றது. சாமி தரிசனம் செய்பவர்கள் கோவிலுக்குச் சென்று வரலாம்' என்று டிரைவர் சொன்னார். ஒவ்வொரு பஸ்சும் அங்கு நின்று விட்டுத்தான் பிறகு செல்லும்.

அம்மூவரில் ஒருவன், 'நாமும் அம்மனைத் தரிசிக்கலாமா?' என்று கேட்டான். மற்ற இருவரும், ''நடமாடும் அம்மன்கள் இங்கு இருக்கும்போது நடமாடாத அம்மனை ஏன் போய்ப் பார்க்க வேண்டும்!' என்று கேலியாகச் சிரித்தனர்.

அவர்கள் கோயிலுக்குள் வரவில்லை. மற்றவர்கள் எல்லாரும் கோவிலுக்குச் சென்று பண்ணாரி மாரியம்மனை வணங்கி பிரசாதம் பெற்றுக்கொண்டு பஸ்சில் வந்து அமர்ந்தோம்.

எங்கள் நெற்றியைப் பார்த்த அவர்கள் இன்று, "இரண்டுபடி விபூதியும், அரைப்படி குங்குமமும் வீண்!" என்று சிரித்தார்கள்.

'பண்ணாரி மாரியம்மா, இவர்களுக்கு நல்ல புத்தியைக் கொடு!' என்று நான் மனதுக்குள் வேண்டிக்கொண்டேன். வேறு எதுவும் செய்ய—பேச முடியவில்லை.

பஸ் புறப்பட்டு இரண்டு பர்லாங் தூரம் சென்றிருக்கும் திடீரென்று பஸ் நின்றுவிட்டது. காரணம், பஸ்ஸுக்கு எதிரே நடுரோட்டில் ஒரு பெரிய யானை நின்று கொண்டி

ருந்தது! எனக்கு அறுபத்தேழு வயதாகிறது. பல யானைகளைப் பார்த்திருக்கிறேன். ஆனால் இவ்வளவு பெரிய யானையைப் பார்த்தது இல்லை. அதன் தந்தங்கள் ஒவ்வொன்றும் சுமார் நான்கு அடி நீளம் இருக்கும்! யானையைப் பார்த்ததும் அந்த இளைஞர்கள் கண்களை மூடிக்கொண்டு, 'இன்று நாம் செத்தோம்!' என்று அலறினார்கள்.

டிரைவர் ஹாரன் சப்தம் செய்தும் ஐந்து நிமிடம் யானை நகரவில்லை. அதோடு எங்கள் பஸ்ஸை நோக்கியும் வர ஆரம்பித்தது. டிரைவர் வண்டியை பின்புறமாகவே சுமார் ஒரு பர்லாங் தூரம் நகர்த்தினார். யானையும் பஸ்ஸை நோக்கியே வந்துகொண்டு இருந்தது. எங்கள் எல்லாருக்குமே நடுக்கம். 'எல்லாம் இந்தப் பையன்களால் வந்த வினை!' என்று நாங்கள் கூறவே, அந்த இளைஞர்கள் அலறிக்கொண்டு 'நாங்கள் செய்தது தவறுதான்... தாயே பண்ணாரி மாரியம்மா, எங்களை மன்னித்துவிடு. இனிமேல் ஒருபோதும் இப்படிப் பேசமாட்டோம்! திரும்பி வரும்போது உன்னை தரிசனம் செய்து மன்னிப்புக் கோருகிறோம்' என்று வாய் விட்டு அழுது வேண்டிக்கொண்டார்கள்.

உடனே யானை பக்கவாட்டில் உள்ள சிறு பாதையில் வேகமாகச் சென்று மறைந்துவிட்டது'' என்றார்.

'அரசன் அன்று கொல்வான்; தெய்வம் நின்று கொல்லும்!' என்பார்கள்.

ஆனால், பண்ணாரி திருத்தலத்திலோ எம் அம்மா அன்றன்றே நின்று பேசி அனைத்து உயிர்களையும் ரட்சிக்கிறாள்.

பண்ணாரித் தலத்தில் நிகழும் தீக்குண்டத் திருவிழாவில் ஜாதிபேதமின்றி, பெரியோர் சிறியோர் என்ற பாகுபாடின்றி ஐந்து வயது குழந்தைகள் முதல் தொண்ணூறு வயது முதியவர்கள் வரை—பக்திப் பெருமுழக்கத்துடன் தீமிதிக் குண்டத்தில் இறங்கும் அருங்காட்சி, கண்ணுற்றோர் மட்டுமே அனுபவித்து மகிழும் அற்புதத் திருக்காட்சி.

மாந்தர் மாத்திரமின்றி கால்நடைகளும்கூட தீக்குண் டத்தில் இறங்கும் காட்சி, அந்தத் தலத்துக்கே ஓர் அபூர்வ சிறப்பு!

நம் ஊரில் திருவிழா நடந்தால் உறவினரை நாம் அழைப்பதுண்டு! அதேபோல் தன் ஆலயத்தில் நடக்கும் தீமிதி திருவிழாவுக்குத் தன் பக்தர்களை மாரியம்மாவே அழைத்த ஒரு செய்தியை ராஜலிங்க குருக்கள் கூறினார்...

## 7

மூணாற்றுத் தண்ணிகளாம், முந்நூறு கோட்டைகளாம்!
முந்நூறு கோட்டையிலும் மாரிக்கு முத்துப்பந்தல் ஜோடனையாம்!
நாலாற்றுத் தண்ணிகளாம்; நானூறுகோட்டைகளாம்!
நானூறு கோட்டையிலும் மாரிக்கு நாகமணி தோரணமாம்!
கோட்டை கட்டி ஆளுகின்ற கோமகளே கண்பாரும்
திம்பவன எல்லை நிற்கும் திகம்பரியே கண்பாரும்!
மண்ணுள்ளோர் தொல்வினைகள் மாதாவே கண்பாரும்
பண்ணாரித் தலம் நின்ற பார்வதியே கண்பாரும்!
எண்ணாத் துயரமம்மா, இனியிருந்தால் தாளாது!
கண்ணின் கடைவீச்சால் காத்திடுவாய் மாதாவே!

—மாரியம்மன் பாமாலை

உலகத்துத் தாய்மாருக்கு ஒரு குடும்பத்தில்தான் பிள்ளை; உலகாளும் எம் தாய் மகமாயிக்கோ உலகமெல் லாம் பிள்ளைகள்!

தம் ஆலயத்தில் பற்றுவைத்த எந்தக் குழந்தையும் திரு நாளுக்கு வரமுடியாமல் தேங்கிவிட்டால் தாய்மனம்பொறுக் குமா...? தேடிச் சென்று அழைத்து வரமாட்டாளா...?

பண்ணாரித் தலம்'நின்ற பராசக்தியும் அப்படி ஒரு திரு விளையாடல் புரிந்தாள்...

கோயம்புத்தூரில் ஆறு குதிரை வண்டிகள் வைத்துப் பிழைப்பு நடத்தும் ஒரு பெண்மனி பண்ணாரித்தாயின் பக்தை. ஆண்டுதோறும் தவறாமல் தீக்குண்டத் திருவிழா வுக்கு வந்து அம்மாவைக் சேவித்துச் செல்வார்.

ஒருமுறை 'தீக்குண்டத்தன்று' வேலை காரணமாக தரிசிக்க வரவில்லை, அந்த அம்மையார்.

மறுநாளே அவருக்குச் சொந்தமான குதிரைகளுக்கு ஜுரம் வந்துவிட்டது. தொழில் தடைப்பட்டது.

மிருக வைத்திய நிபுணர்களிடம் குதிரைகளுக்குச் சிகிச்சை அளித்தார்கள். பயனில்லை.

கலங்கிய அந்த அம்மையாருக்கு அப்போதுதான் பண்ணாரித்தாயின் நினைவும், தான் தீக்குண்டத் திருவிழா வுக்குச் செல்லாத குறையும் உணர்வில் தோன்றியது.

'தன்னை திருவிழாவுக்கு அழைக்கவே அம்மா குதிரை களுக்கு வியாதியை உண்டாக்கியிருக்கிறாள்' என்று உணர்ந்த அப் பெண்மணி, தீக்குண்டத் திருவிழாவைத் தொடர்ந்து அத் தலத்தில் நிகழும் 'மறுபூஜை'க்கு வந்து அம்மாளை தரிசித்து, தீர்த்தமும்-விபூதியும் வாங்கிச் சென்றார்.

அந்த தீர்த்தத்தையும் தெளித்து, விபூதியைப் போட் டதும் குதிரைகளின் ஜுரம் குணவாகி விட்டது!

—இவ்வாறு ஒவ்வொருவர் வாழ்விலும் தன் அருள் விளையாட்டால் அற்புதங்கள் நிகழ்த்திவரும் எம் பண்ணாரி அம்மா, ஒரு தீயசக்தியை அழித்து ஒரு பிரளயத் திருவிளை யாடலை நிகழ்த்திய செய்தி. ஓர் சரித்திரச்சான்றுகளுட னேயே வெளிப்பட்டிருக்கிறது.

பதினேழாம் நூற்றாண்டில் நிகழ்ந்த சம்பவம் இது...

அப்போது பண்ணாரி தலமும்—அதையொட்டிய சத்திய மங்கலம் கோட்டையும் — டணாயக்கன் கோட்டையும் —

பாலராஜா என்ற பாளையக்காரரின் பொறுப்பில் இருந் தாலும், அதன் பராமரிப்பு மைசூரை ஆண்ட திப்புசுல் தானின் மேற்பார்வையில்தான் இயங்கி வந்தது.

அங்கிருந்த பழைய மகாராணி லட்சுமி அம்மணி மைசூர் மன்னனை திப்புசுல்தானின் பொறுப்பில் சிறை வைக்கப்பட்டிருந்தார். இந்நிலையில் பாலராஜா திப்புசுல் தானுடன் நேசபாவத்துடன் பழகி வந்தாலும், மறைமுக மாக திப்புசுல்தானின் ஆட்சியை அகற்றிப் பழைய மகா ராணி லட்சுமி அம்மணிக்கு ராஜ்யப் பொறுப்பைப் பெற்றுத் தரவே முயன்று வந்தார்.

அந்த அவருடைய மனோபாவத்தை, அப்போது நுழைந் திருந்த ஆங்கிலேயர்கள் மிகத் தந்திரமாக ஒரு தீய முயற் சிக்குப் பயன்படுத்தத்தொடங்கினர். அதாவது, தம் சீமைச் சாராய வியாபாரத்தைப் பெருக்கும் முயற்சிக்குத்தான்!

திப்புசுல்தான் பூரண மதுவிலக்கை தம் மைசூர் மாநிலத்தில் அமல் செய்திருந்தார். ஆனால், ஆங்கிலேயரோ தம் சீமைச்சாராய வியாபாரத்தை மைசூரில் பரப்புவதற்கு, பண்ணாரி அருகிலிருந்த டயனாயக்கன் கோட்டைப் பகுதியை நுழைவாயிலாகப் பயன்படுத்த விரும்பினார்கள். திப்பு சுல்தான் ஆட்சியின் மீதிருந்த வெறுப்பால் பாலராஜாவும் அதற்கு உடன்பட்டார்.

அதன்படி சீமைச்சாராய வியாபாரமும் நடந்தது!

ஓர் உணர்ச்சி வேகத்தில் இதற்கு பாலராஜா உடன்பட் டாலும்கூட, அவருடைய மனச்சாட்சி அவரைக் குழப் பியது. குடிமக்களுக்குத் தீமையான மதுவுக்கு ஆதரவாக வும், தன்மீது நம்பிக்கை கொண்டிருந்த திப்புசுல்தானுக்கு எதிரான ஒரு தீய முயற்சிக்குத் துணையாகவும், தாம் செயல் படுவது அவருக்கு வேதனையளித்தது.

அந்த மனவேதனையுடன் பண்ணாரி திருத்தலத்துக்கு வந்து, அன்னையைத் தொழுது நின்றார். அச்சமயம் ஆலய பூசாரிக்கு உக்கிராவேசத்துடன் குடிமக்களின் நன்மைக்கு,

விரோதமாக டணயக்கன் கோட்டைப் பகுதிகள் பயன்பட்ட தால், அந்தப் பகுதியையே நீரில் மூழ்கடித்து அழித்துவிட தேவி சித்தம் கொண்டிருக்கிருள்' என்று கூறினுராம்.

அதைக் கேட்டு மனம் வருந்திய பாலராஜா, மகாராணி லட்சுமி அம்மணியிடம் அம்மனின் அருள்வாக்கைப் பற்றிய செய்தியைச் சொன்னுராம். மகாராணியோ ஆறுதலுடன், "இன்று ஏழை மக்களுக்கு விரோதமான காரியத்துக்குப் பயன் படும் அப்பகுதி பண்ணுரி அம்மாவின் திருவிளையாட்டால் நீரில் அழிந்தாலும், மக்களுக்குப் பயன்படும் வகையிலே தான் அந்த அழிவும் இருக்கும். தேவியின் கோபம் மக்களை அழிக்காது. அவளுடைய கோபமும்கூட மக்களின் நன்மைக் காகவே இருக்கும்!" என்ருராம். இந்த செய்தி சரித்திரத் தில் இடம் பெற்றிருக்கிறது.

அதன்பின், அம்மாவின் அருள்வாக்குப்படியும், மகா ராணியின் நம்பிக்கைப்படியுமே பிற்காலத்தில் டணயக்கன் கோட்டை இருந்த பகுதியில் ஒரு மாற்றம் நிகழ்ந்திருக் கிறது;

ஆம்; அந்தப் பகுதியில்தான் தற்போது கீழ் பவானி அணைக் கட்டப்பட்டு பல லட்சம் மக்களுக்கு அது இன்று பயன்படுகிறது. இந்த அணைக் கட்டப்படும்போது டணயக் கன் கோட்டையும்—அதன் உள்ளடங்கிய சுமார்பதினெட்டு கிராமங்களும், நீரில் மூழ்கிவிட்டடன!

ஃ ஃ ஃ

எத்தனை எத்தனை அற்புதச் செய்திகள்! வரலாறுகள்! அத்தனையையும் நிகழ்த்தியவாறு அன்னை பண்ணுரி மாரி யம்மா—திம்பம்மலைப் பிரதேசத்தில் தீனர்களுக்கு அடைக் கலமாய், தன் தீப ஒளியே ஓர் அருட்புனலாய் நின்று அருள் சாதித்துக்கொண்டிருக்கிருள்!

விநாடிக்கு விநாடி அங்கு வந்து நிற்கும் வாகனங்களும், அவற்றிலிருந்து இறங்கி அலைஅலையாக ஆலயத்துக்குள் நுழைந்து அம்பாளை சேவித்து, அருளமைதி பெற்றுச் செல்

வோருமாக அந்தத் தலம் தேனீக்களின் ரீங்காரமாகக் கண கணத்துக் கொண்டிருக்கிறது.

கண்ணுக்கெட்டிய திக்கெங்கும் மலைத்தொடர்கள்... ஆம்! ஐந்து மலைகளுக்கு நடுவே எம் அம்மா அருளிருக்கை கொண்டிருக்கிறுள். ஊராய்ச்சிக் கோட்டை என்னும் வேத கிரி, பெருமாள் மலை, சங்ககிரி, பத்மகிரி, நாககிரி—ஆகிய இந்த மலைகளுக்கு நடுவே பண்ணாரித்தாய் வீற்றிருக்கும் போது, அங்கே இந்த மலைகளையெல்லாம்விட உயர்ந்த மலை ஒன்று விண்ணையும், மண்ணையும் கடந்து ஜொலிக்கிறது. அதுதான் பராசக்தியின் பாரிஜாத திருப்பாதங்கள் பதிந்த மர்ந்த அந்த பண்ணாரித் திருமண்ணில் அமுதமாய் வளர்ந்து நிற்கும் நம் அம்மாவின் கருணை எனும் மலை! குன்றுகளையும் கோடுகளையும் கடந்த திருவருட்கோலமாய் எழுந்தருளியிருக் கும் அம்மாவை கரம்கூப்பித் தொழுது நிற்கிறேம்.

அவள் ஆளுகைக்குட்பட்டு நிற்கும் ஆலயமெங்கும் புனிதமும் தெய்வமும் பொருநைத் தென்றலாகப் பரவி தெய்விக மணம் கமழ்ந்து கொண்டிருக்கிறது.

அந்த ஆலய ஊழியர்கள் மத்தியில்கூட எத்தலத்திலும் காணமுடியாத ஒரு கட்டுப்பாட்டைக் கண்டு வியக்கிறேம். பூசாரியான திரு. பொம்மப்பனின் தட்டில் யாரோ ஒரு பக்தர், மற்ற ஆலயங்களில் செய்வதுபோல காணிக்கையாக காசு வைக்கிறுர். ஆனல் பொம்மப்பரோ, தட்டில் விழுந்த காசை எடுத்து அம்மனின் உண்டியலில் போட்டுவிடுகிறுர். அந்தத் தலத்தில் பூசாரி தட்டுக் காசை எடுத்துக் கொள் வதில்லையாம்.

ஆலய தர்மகர்த்தாக்களில் ஒருவரான திரு. வீரப்ப கவுடரும் சரி, ஆலய நிர்வாக அதிகாரி திரு. வெங்கடாசல மும் சரி, மற்ற பணியாளர்களான முனுசாமி, வெங்கட் ராமன், ராஜகோபால் ஆகியோரும் சரி—தம் அந்தஸ்து களைக் கட்டுப்படுத்தி, பக்தர்களுள் ஒருவராக பக்தியில் கரைந்து, எங்கோ மூலையில் நின்று தொழுது கொண்டிருக்

ஞர்களே தவிர அதிகாரமிடுக்கு அம்மாவின் ஆலயற்றில் எந்த முனையிலும் தென்படவில்லை.

அந்த எல்லையில் ஒரே அதிகாரி நம் உயிராவிய திருவருட் பெருமாட்டியான பண்ணாரி மாரியம்மா ஒருவள்தான்.

காலை ஆறு மணிக்கு தொடங்கிய காலைசந்தி பூஜையிலிருந்து—இரவு ஏழரை மணிவாக்கில் நடைசாத்தும்வரையில் அவள் ஆலயத்தில் நடக்கும் மூன்று பூஜையின் போதும் (காலை ஆறு மணி; உச்சிக்காலம் பன்னிரண்டு மணி; மாலைக் காலம் ஆறு மணி) . அங்கு நடக்கும் அபிஷேகங்களின் போதும், அம்மாவைச் சேவித்துத் தொழுது உய்யும் பக்த கோடிகள் எல்லாம், இந்த மண்ணிலே மாதவம் செய்த புண்ணியத் திருமக்கள்! அவர்கள் பெற்ற பேறு வேறு யார் பெறுவார்...?

சுயம்புமூர்த்தியான அம்பாளுக்கு மட்டும் அங்கு அபிஷேகம் கிடையாது. ஆனால், அன்னை சிலாவிக்கிரகமாக அமர்ந்து மக்கள் நடத்தும் அபிஷேகங்களை ஏற்றுக்கொண்டிருக்கிறாள்.

எம் லோக நாயகிக்குத்தான் அங்கு எத்தனை எத்தனை அபிஷேகங்கள்! பஞ்சாமிர்தம், பால், மஞ்சப் பொடி குங்குமம், விபூதி, சந்தனம், பன்னீர், இளநீர், பழரசங்கள், தயிர்...இன்னும் எத்தனையோ வகைக்ள்!

தன் விழிவீச்சு எல்லையெங்கும் வெற்றிப்பறையொலிக்க விண்ணார்ந்த பெருமையுடன் பண்ணாரித் திருத்தலத்தில் அம்மா லோக பரமேஸ்வரி வீற்றிருக்கும் திருக்கோலம் கண்டு மெய்சிலிர்த்து நிற்கிறோம்.

பத்மமலர் பீடத்தில் வீற்றிருக்கும் அம்பிகையின் திருச் சிரசிலோ ஜுவாலை கிரீடம் நெற்றிப்பட்டையோடு ரத்தின திலகம் நுதலை அலங்கரிக்கிறது. கனகஜோதி வீசும் கண்மலர் களுடன் மூக்குத்தி புல்லாக்கு திருமாங்கல்யம் ஆகியவை ஒளிவீச சதுர்புஜங்களுடன் கொலுவிருக்கிறாள் எங்கள் குல நாயகியான ஈஸ்வரியாள்.

சதுர்புஜத்தில்—வலது மேல் கரத்தில் உடுக்கை, இடது கரத்தில் பாசாங்குசம்; வலது கீழ்க்கரத்தில் கத்தி, இடது கீழ்க்கரத்தில் கபாலம் ஏந்தி, வேங்கை மரத்தைத் தன் அருளுக்குரிய தல விருட்சமாக ஏற்று, விழிகளில் கருணைச் சுனை ஊற்றெடுத்துப் பிரவகிக்க—நம் ஆத்தாள் ஆதி பரமேஸ்வரி வீற்றிருக்கும் அருட்கோலம் காண ஆயிரம் ஆயிரம் கண்களும் போதா! ஆயுட்காலமும் போதா! போதா...போதவே போதா!

அவளுடைய திவ்ய திருமுகத்தைக்கண்டு மெய்சிலிர்த்து நிற்கிறோம். மேனியெங்கும் புல்லரித்துப் பொங்குகிறது. உள்ளத்து உணர்வெல்லாம் கிளர்ந்து அவள் திருநாமத்தைப் போற்றிப் போற்றிப் பூரிக்கிறது...

கொற்றவையே, கோதில்லாது எனக்கு உற்ற தாயே! சௌந்தரியே, நிரந்தரியே! சந்தனத்து தன்மைசேர் தயாபரியே! பிராமிணியே, வைஷ்ணவியே, ருத்ராணியே! ருத்திரனுக்கு சமம் நின்ற மாகாளியே! மகாமாயியே! இந்த மாதலத்தில் மாசகற்ற வந்துதித்த மாதவளே! மங்கலமே, எம் மனத்துள் பொங்கும் அருள் ஓங்கார கங்கரியே!

நீங்காத் துயர்கொண்டு நெஞ்சார்ந்த சுமை கொண்டு, நீள் நிலத்தில் துணையின்றி நின்பாதம் பற்றவென, நெடும் பாதை நடந்து வந்தோம், 'நில்'லென்று சொல்லியல்லோ, எம் அல்லல்தனைப் போக்க.

நின் அருள்வாக்கு சுரந்துவிட்டால்—நின் அமுதவிழி திறந்துவிட்டால்—

எம்மை வாட்டக் 'கொல்'லென்று வந்த எமன் குடியோடிப் போகானோ!

மன்னே! மரகதமே! எம் மாதாவே! மனம் சுரந்து பொன்னார் கழல் சேர்ந்த நின் பொற்பாதம் ஈந்து எம்மை எந்நாளும் ரட்சிப்பாய் ஈஸ்வரியே, நீ. சரணம்!

# ஸ்ரீ லலிதா அஷ்டோத்திர சத நாமாளி

அம்பிகையின் வீரத்தையும், உக்கிரகத்தையும் காட்டும் ரூபம் மாரி, காளி என்பதெல்லாம். அதே மாதிரி சாந்த ஸ்வரூபியாய் வரமளிக்க காத்திருக்கும் உருவம் ஸ்ரீ லலிதாம்பிகை.

இந்த அம்பிகையின் நூற்றெட்டு நாமாக்களையும் அர்த்தத்துடன் தந்திருப்பதன் நோக்கமே சம்ஸ்கிருத உச்சரிப்புகள் வாயில் நுழையாதவர்களுக்கும் அர்த்தத்தைப் படித்து பூவால் அர்ச்சித்தாலும் போதும். சில காலத் திற்குள் பதினாறு பேறுகளையும் பெறுவர் என்பது நிச்சயம்.

[முதலில் அம்பிகையை தியானிக்க சொல்ல வேண்டிய ஸ்தோத்திரம்]

ஸிந்தூர அருண விக்ரஹாம் த்ரி நயனாம்
மாணிக்க மௌளி ஸ்புரத்
தாரா நாயக சேகராம் ஸ்மித முகீம்
ஆபீன வக்ஷோ ருஹாம்
பாணிப்யாம் அளி பூர்ண ரத்ன சஷகம்
ரக்தோத் பலம் பிப்ரதீம்
ஸௌம்யாம் ரத்ன கடஸ்த்தக்த சரணாம்
த்யாயேத் பராமம் பிகாம்

குங்கும நிறத்தழகி! மூன்று கண்களை உடைய அம்பிகே! மாணிக்க மகுடத்தில் சந்திர நாலங்கரம் பெற்ற ஈஸ்வரி! மந்த ஹாச முகத்தவளே! பருத்த ஸ்தனங்களை உடைய தேவி! மதுக்குடத்தை ஒரு கரத்திலும், சிவந்த நெய்தல் மலரை மறுகையிலும் தரித்த சுந்தரி! எனக்கருள் செய்யக் காத்திருக்கும் ராஜ ராஜேஸ்வரி! ரத்தினக் குடத்தின் மேல் பாதங்களை வைத்திருக்கும் பரதேவதே! என் கவலையைக் களைய உன்னை வேண்டுகிறேன்.

1. ஓம் ரஜதாசல சிருங் காக்ர மத்யஸ்தாயை நமோ நம:
2. ஹிமாசல மஹா வம்ச பாவனாயை நமோ நம;
3. சங்கரார்த் தாங்க ஸௌந்தர்ய சரீ ராயை நமோ நம:
4. லஸன் மரகத ஸ்வச்ச விக்ர ஹாயை நமோ நம:
5. மஹாதிசய ஸௌந்தர்ய லாவண்யாயை நமோ நம:
6. சசாங்க சேகர ப்ராண வல்லபாயை நமோ நம:
7. ஸதா பஞ்சதசாத் மைக்ய ஸ்வரூபாயை நமோ நம:
8. வஜ்ர மாணிக்ய கடக கிரீடாயை நமோ நம;
9. கஸ்தூரி திலகோத் பாஸி நிடிலாயை நமோ நம:
10. பஸ்ம ரேகாங்கித லஸன் மஸ்தகாயை நமோ நம:

1. வெள்ளி மலையின் மத்திய பாகத்தில் வீற்றிருக்கும் கைலாஸபதியின் பத்தினிக்கு எனது நமஸ்காரங்கள்.

2. மன்னவன் ஹிமவானின் புதல்வியாக அவதரித்த பார்வதிக்கு எனது நமஸ்காரங்கள்.

3. அர்த்தநாரீஸ்வரியான உமாதேவிக்கு நமஸ்காரம்.

4. பிரகாசிக்கும் மேனியழகுடைய மரகதவல்லிக்கு நமஸ்காரம்.

5. அதிசயிக்கும் அழகு பொருந்திய கொடி போன்ற சுந்தரிக்கு எனது நமஸ்காரம்.

6. சந்திரனைத் தலையில் தரித்த சந்திரசேகரின் உயிரான பத்தினியே, உனக்கு நமஸ்காரம்.

7. ஊழிக்காலத்திலும், பிரளய காலத்திலும் கூட சிவனை விட்டுப் பிரியாதிருப்பவளே, உனக்கு நமஸ்காரம்.

8. வைர வளையல்களாலும், மாணிக்க கிரீடத்தாலும அலங்கரிக்கப்பட்ட பவானி! உனக்கு நமஸ்காரம்.

9. கஸ்தூரி திலகத்தால் பிரகாசிக்கும் வதனத்தை உடையவளே, உனக்கு நமஸ்காரம்.

10. எப்போதும் விபூதிக் கீற்றினால் அலங்கரிக்கப்பட்ட மேல் நெற்றியை உடைய சிவே உனக்கு நமஸ்காரம்!

11. விகசாம் போருஹதள லோசனாயை நமோ நம:
12. சரச் சாம்பேய புஷ்பாப நாஸிகாயை நமோ நம:

13. லஸத் கனக தாடங்க யுகலாயை நமோ நம!
14. மணி தர்ப்பண ஸங்காச கபோலாயை நமோ நம:
15. தாம்பூல பூரிதஸ்மேர வதனாயை நமோ நம:
16. ஸுபக்வ தாடிமீ பீஜரதனாயை நமோ நம:
17. கம்பு பூக ஸமச்சாய கந்தராயை நமோ நம:
18. ஸ்தூல முக்தாபலோ தார ஸுஹா ராயை நமோ நம:
19. கிரிச பத்த மாங்கல்ய மங்களாயை நமோ நம:
20. பத்ம பாசாங்குச லஸத் கராப்ஜாயை நமோ நம.

11. மலர்ந்த தாமரை இதழ் போன்ற விழிகளை உடையவளே உனக்கு நமஸ்காரம்.

12. சரத்கால சண்பக மலர் போன்ற மூக்கை உடையவளே உனக்கு நமஸ்காரம்.

13. ஜொலிக்கும் தங்கத்தோடுகளைப் பூண்ட காதுகளை உடைய அம்பிகைக்கு நமஸ்காரம்.

14. கண்ணாடியைப் போல் பளபளக்கும் கன்னங்களை உடைய கௌரிக்கு எனது நமஸ்காரம்.

15. தாம்பூலச் சிவப்பு நிறைந்த உதடுகளில் புன்முறுவல் பூக்கும் முகத்தை உடைய தேவிக்கு எனது நஸ்மகாரம்.

16. கனிந்த கோவைப்பழம் போன்ற உதடுகளை உடைய மீனாட்சிக்கு எனது நமஸ்காரம்.

17. சங்கு போன்ற கழுத்தை உடைய காமாட்சி தேவிக்கு நமஸ்கரரம்.

18. பெரிய முத்துக்களால்ஆன ஹாரத்தை அணிந்திருப்பவளே உனக்கு நமஸ்காரம்.

19. கைலாஸாதிபதியால் கட்டப்பட்ட மாங்கல்யத்தை அணிந்திருக்கும் மங்களாம்பிகே உனக்கு நமஸ்காரம்.

20. தாமரை, பாசம், அங்குசம் தாங்கிய கரங்களை உடையவளே உனக்கு நமஸ்காரம்.

21. பத்ம கைரவ மந்தார ஸுமாலின்யை நமோ நம:
22. ஸுவர்ண கும்பயுக்மாப ஸுகுசாயை நமோ நம:

23. ரமணீய சதுர் பாஹு ஸம்யுக்தாயை நமோ நம:
24. கனகாங்கத கேயூர பூஷிதாயை நமோ நம:
25. ப்ருகத் ஸௌவர்ண வஸனாயை நமோ நம:
29. ப்ருகத் நிதம்ப விலஸத் ஜகனாயை நமோ நம:
27. ஸௌபாக்ய ஜாத ஸ்ருங்கார மத்யமாயை நமோ நம:
28. திவ்ய பூஷண ஸந்தோஹ ரஞ்சிதாயை நமோ நம:
29. பாரிஜாத குணாதிக்ய பதாப்ஜாயை நமோ நம:
30. ஸுபத்மராக ஸங்காச சரணாயை நமோ நம:

21. தாமரை, மந்தாரம் முதலிய வாசனைப் பூக்களால் கட்டிய மாலையணிந்த மகேஸ்வரிக்கு நமஸ்காரம்.

22. கவிழ்ந்த பொற்கிண்ணம் போன்ற ஸ்தனங்களை உடையவளே உனக்கு நமஸ்காரம்.

23. ஒன்றுக்கொன்று மாறுபடாத நான்கு புஜங்களை உடையவளே உனக்கு நமஸ்காரம்.

24. தங்கத்தாலான வங்கி அலங்கரிக்கும் கரங்களை உடையவளே உனக்கு நமஸ்காரம்.

25. தங்க ஒட்டியாணம் அணிந்த மெல்லிய இடையுடையவளே உனக்கு நமஸ்காரம்.

26. அழகிய பின்னழகும் பருத்த தொடைகளை உடையவளுமான சிவப்பிரியைக்கு நமஸ்காரம்.

27. சௌபாக்யங்களைத் தரும் அழகிய தேவிக்கு நமஸ்காரம்.

28. அழகிய ஆபரணங்களுக்கே பெருமை சேர்ப்பவளே உனக்கு நமஸ்காரம்.

29. பாரிஜாத மலரைவிட வசீகரமான பாதங்களை உடையவளுக்கு நமஸ்காரம்.

30. மருதாணி இட்டிருப்பதுபோன்ற சிவந்த பாதங்களை நமஸ்கரிக்கின்றேன்.

31. காமகோடி மஹா பத்ம பீடஸ்த்தாயை நமோ நம:
32. ஸ்ரீ கண்ட நேத்ர குஸும சந்திரிகாயை நமோ நம:
33. ஸசாமர ரமாவாணி வீஜிதாயை நமோ நம:
34. பக்த ரக்ஷண தாக்ஷிண்ய கடாக்ஷாயை நமோ நம:

35. பூதே சாலிங்கன—உத்பூத—புலகாங்க்யை நமோ நம:
36. அனங்க ஜனகா பாங்க வீக்ஷுணாயை நமோ நம:
37. ப்ரம்மோ பேந்திர சிரோ நத்ன ரஞ்சிதாயை நமோ நம:
38. சசீ முக்யாமர வதூ ஸேவிதாயை நமோ நம:
39. லீலா கல்பித ப்ரம்மாண்ட மண்டலாயை நமோ நம:
40. அம்ருதாதி மஹாசக்தி ஸம் வ்ருதாயை நமோ நம:

31. ஸ்வர்ணத்தாலான தாமரையில் காம கோடி பீடத்திலிருப்பவளே உனக்கு நமஸ்காரம்.

32. அல்லி சந்திரனைக்கண்டு மலர்வதைப்போல தங்களைக்கண்டு சந்திரசேகரரின் விழிகள் மலர்கின்றன.

33. மஹாலட்சுமியும், ஸரஸ்வதியும் சாமரம் வீசும் ராஜேஸ்வரிக்கு என் நமஸ்காரம்.

34. பக்தர்களின் குற்றங்களை மன்னித்து இரக்க மனதோடு கருணை செய்யும் கருணாகரிக்கு நமஸ்காரம்.

35. சிவபெருமானின் ஆலிங்கனந்தால் பரவசப்படும் அங்கங்களை உடைய அங்கயற் கண்ணிக்கு நமஸ்காரம்.

36. மன்மதனைக் கடைக்கண்ணால் மறுபடி உலவவிட்ட மகேஸ்வரிக்கு நமஸ்காரம்.

37. பிரம்மா, இந்திரன் முதலான தேவர்கள் தேவியை சாஷ்டாங்கமாக வணங்குகையில் அவர்கள் கிரீடத்தின் பிரகாசத்தை விட தேவியின் பாதம் அதிகம் ஜொலிக்கிறது. அப்படிப்பட்ட பாதகாந்தியை உடைய காந்திமதிக்கு நமஸ்காரம்.

38. இந்திரனும், இந்திராணியும் அஷ்டதிக்கு பாலர்களும் தம்பதிகளாக வந்து சேவிக்கும் சேவிதைக்கு நமஸ்காரம்.

39. வேடிக்கையாய் சிருஷ்டிக்கப்பட்டது. இந்த பூலோகம் அந்த பூலோக நாயகிக்கு நமஸ்காரம்.

40. அம்ருதா, ஆகர்ஷிணி முதலிய மகாசக்திகளால் சூழப்பட்டு விசுக்திச் சக்கரத்தில் வீற்றிருக்கும் ஜகன் மாதாவுக்கு நமஸ்காரம்.

41. ஏகாத பத்ர ஸாம் ராஜ்ய தாயிகாயை நமோ நம:
42. ஸனகாதி ஸமா ராத்ய பாது காயை நமோ நம:
43. கல சோத்பவ தூர்வாஸ பூஜிதாயை நமோ நம:
44. தேவர்ஷிபிஸ் தூயமான வைப வாயை நமோ நம:
45. மத்தேப வக்த்ர ஷட்வக்த்ர வத்ஸவாயை நமோ நம:
46. சக்ர ராஜ மஹாயந்த்ர மத்ய வர்த்யை நமோ நம:
47. சிதக்னி குண்ட ஸம்பூத ஸுதேஹாயை நமோ நம:
48. சகாங்க கண்ட ஸம்யுக்த மகுடாயை நமோ நம:
49. மத்த ஹஸ்ஸ வதூ மந்த கமனாயை நமோ நம:
50. வந்தாரு ஜன ஸந்தோஹ வந்திதாயை நமோ நம:

41. ஒரே வெண் கொற்றக் குடையின் கீழ் சாம் ராஜ்யத்தையே ஆளக்கூடிய அதிர்ஷ்டத்தைக் கொடுக்கும் விஜயாம்பிகைக்கு நமஸ்காரம்.

42. உன் பாதுகைகளே ஸனகாதி முனிவர்கள் ஆராதனை செய்யும் பாக்கியம் பெற்றவை.

43. அகஸ்தியர், துர்வாஸர் போன்ற மகாமுனிவர் களால் பூஜிக்கப்படுபவளே உனக்கு நமஸ்காரம்.

44. நாரதர் போன்ற தேவரிஷிகளால் ஸ்தோத் தரிக்கப்படும் அபிராமிக்கு எனது நமஸ்காரம்.

45. விநாயகரிடமும், ஆறுமுகனிடமும் அன்பு காட்டும் ஆவுடையாளுக்கு என் நமஸ்காரம்.

46. ஸ்ரீசக்ர பீடத்தின் நடுவில் வீற்றிருக்கும் காம கலாகா மேஸ்வரிக்கு என் நமஸ்காரம்.

47. அக்னியில் தோன்றிய அம்பிகைக்கு நமஸ்காரம்.

48. சந்திரனின் அர்த்தபாகம் கொண்ட மகுடம் தரித் திருப்பவளுக்கு எனது நமஸ்காரம்.

49. ஹம்ஸம் போன்ற கம்பீர நடை கொண்ட ஹம்ஸவதனிக்கு நமஸ்காரம்.

50. சப்த ரிஷிகளாலும், ஜனக்கூட்டங்களாலும் வணங்கப்படும் கோமதித்தாயாருக்கு நமஸ்காரம்.

51. அந்தர் முக ஜனாநந்த பலதாயை நமோ நம:
52. பதிவ்ரதாங்கனா பீஷ்ட பலதாயை நமோ நம:

53. அவ்யாஜ கருணாபூர பூரிதாயை நமோ நம:
54. நிரஞ்சன சிதானந்த ஸம்யுக்தாயை நமோ நம:
55. ஸஹஸ்ர சூர்ய ஸம்யுக்த பரகாசாயை நமோ நம:
56. ரத்ன சிந்தாமணி க்ருஹ மத்யஸ்தாயை நமோ நம:
57. ஹானி விருத்தி குணாதிக்ய ரஹிதாயை நமோ நம:
58. மஹா பத்மாடவீ மத்ய நிவாஸாயை நமோ நம:
59. ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தீனாம் ஸாக்ஷி பூத்யை நமோ நம:
60. மஹாதா பௌக பாபானாம் விநாசின்யை நமோ நம:

51. மனநிறைல் பூஜிக்கும் மாந்தருக்கு நினைத்த காரியத்தை முடித்து வைக்கும் வேதவல்லிக்கு நமஸ்காரம்.

52. பதிவிரதைகள் பூஜிக்கும்போது கேட்ட வரத்தை கேட்டவுடன் கொடுக்கும் பவானி தேவிக்கு நமஸ்காரம்.

53. அதிசயமான ஆனால் விவகாரமில்லாத அற்புதங்கள் நடத்தும் அகிலாண்டேஸ்வரிக்கு நமஸ்காரம்.

54. எப்போதும் பேரானந்தத்துடன் காட்சி அளிக்கும் ஆனந்தவல்லிக்கு நமஸ்காரம்.

55. ஆயிரம் சூரியப் பிரகாசத்துக்கு நிகரான ஒளியை உடைய ஸ்வேதவதிக்கு நமஸ்காரம்.

56. ரத்ன மயமான சிந்தாமணிக் கிருஹத்தின் நடுவில் வசிக்கும் கன்யாகுமாரிக்கு நமஸ்காரம்.

57. இறப்பு, பிறப்பு, பிணி, மூப்பற்ற தேவிக்கு நமஸ்காரம்.

58. தங்கத்தாமரைகள், தெய்வ விருஷங்கள் கூடியவனத்தின் நடுவே வசிப்பவளே உனக்கு நமஸ்காரம்.

59. உறக்கம், கனவு, விழிப்பு இவைகளுக்கு ஆதாரமாக இருக்கும் விசாலாட்சிக்கு எனது நமஸ்காரம்.

60. கெட்ட மோகங்களையும், சகல பாபங்களையும் அழிக்கும் விநாசினிக்கு எனது நமஸ்காரம்.

61. துஷ்ட பீதி மகாபீதி பஞ்சனாயை நமோ நம:
62. ஸமஸ்த தேவ தனுஜ ப்ரேரகாயை நமோ நம:
63. ஸமஸ்த ஹ்ருதயாம் போஜ நிலயாயை நமோ நம:

64. அனுஹத மகாபத்ம மந்திராயை நமோ நம :
65. ஸஹஸ்ரா நஸரோஜாத வாஸிதாயை நமோ நம :
66. புனரா விருத்தி ரகித புரஸ்தாயை நமோ நம :
67. வாணீ காயத்ரீ ஸாவித்ரீ ஸந்நுதாயை நமோ நம :
68. நீலா, ரமா, பூ, ஸம்பூஜ்ய பாதாப் ஜாயை நமோ நம:
69. லோபா முத்ரார்ச்சித ஸ்ரீமச் சரணாயை நமோ நம ;
70. ஸஹஸ்ர ரதி ஸௌந்தர்ய சரீராயை நமோ நம :

61. இயற்கையால் ஏற்படும் வெள்ளம், தீ, பூகம்பம் போன்ற ஆபத்துக்களின்றும், துஷ்டர்களால் ஏற்படும் கொலை, கொள்ளை, சதி போன்றவற்றிலிருந்தும் காக்கும் கருணாகரிக்கு நமஸ்காரம்.

62. எல்லா தேவதைகளுக்கும் அதிகாரியாயிருப் பவளுக்கு நமஸ்காரம்,

63. எல்லாருடைய இருதயத்திலும் வசிக்கும் அம்பிகே உனக்கு நமஸ்காரம்.

64. தாமரையில் வீற்றிருக்கும் பத்மவல்லிக்கு நமஸ்காரம்.

65. ஆயிரம் இதழ் கொண்ட தாமரையில்வசிப்பவளே உனக்கு நமஸ்காரம்.

66. மறுபிறவி இல்லாத மூலாதாரத்தில் வீற்றிருக்கும் கற்பகவல்லி உனக்கு நமஸ்காரம்.

67. சரஸ்வதி, காயத்ரி, சாவித்ரி இவர்களால் வணங்கப்படுபவளே உனக்கு நமஸ்காரம்.

68. ஸ்ரீதேவி, பூமாதேவி, நீலாதேவி இவர்கள் பணி யும் பாதார விந்தங்களில் இந்த ஏழையும் நமஸ்கரிக்கின் றேன்.

69. அகஸ்தியரின் பத்தினி லோபாமுத்திரை அர்ச்சிக் கும் பாதங்களை நானும் வணங்குகின்றேன்.

70. ஆயிரம் ரதிகள் சேர்ந்தாலும் என் தேவியின் அழகுக்கு ஒப்பாக மாட்டார். அப்படிப்பட்ட தேவிக்கு என் நமஸ்காரம்.

71. பாவனா மாத்ர ஸந்துஷ்ட ஹ்ருதயாயை நமோ நம :
72. நத ஸம்பூர்ண விஞ்ஞான ஸித்தி தாயை நமோ நம :
73. த்ரிலோசன க்ருதோல்லாஸ பலதாயை நமோ நம :
74. ஸ்ரீஸுதாப்தி மணித்வீப மத்ய காயை நமோ நம :
75. தக்ஷாத் வர விநிர் பேத ஸாதனாயை நமோ நம :
76. ஸ்ரீநாத ஸோதரீ பூத சோபி தாயை நமோ நம :
77. சந்திர சேகர பக்தார்த்தி பஞ்சனாயை நமோ நம :
78. ஸர்வோ பாதி விநிர்முக்த சைதன்யாயை நமோ நம :
79. நாம பாராயணா பீஷ்ட பலதாயை நமோ நம ,
80. ஸ்ருஷ்டி—ஸ்திதி—திரோ தான சங்கல் பாயை

நமோ நம :

71. அம்பிகையை நினைக்க நேரமில்லையே என்று வருந்திய உடனேயே வரத்தைக் கொடுக்கும் அன்ன பூரணிக்கு எனது நமஸ்காரம்.

72. நமஸ்கரித்து, பூஜித்தவனுக்கு சம்பூர்ணமான ஞான மார்க்க சித்தியை அளிக்கும் ஞானேஸ்வரிக்கு எனது நமஸ்காரம்.

73. முக்கண்ணனான சிவன் தரும் வரங்களையும் சேர்த்தளிக்கும் சங்கரிக்கு நமஸ்காரம்.

74. பாற்கடலின் நடுவிலிருக்கும் சிந்தாமணி பீடத்தில் வசிக்கும் சௌந்தர நாயகிக்கு நமஸ்காரம்.

75. தக்ஷன் யாகத்தை நாசமாக்கி, அவன் கர்வம் ஒடுக்கி தக்ஷிணாமூர்த்திக்கு சேவை செய்த தாட்சாயணிக்கு எனது நமஸ்காரம்.

76. ஸ்ரீ மஹா விஷ்ணுவின் சகோதரியான மஹா மாயைக்கு நமஸ்காரம்.

77. சிவ பக்தர்களின் சஞ்சலத்தைப் போக்கும் சியாமளா தேவிக்கு நமஸ்காரம்.

78. சகல வியாதிகளையும் போக்க வல்ல நாராயணிக்கு எனது நமஸ்காரம்.

79. தேவியின் பெயர்களை உச்சரித்த மாத்திரத்லேயே தேவையான எல்லாவற்றையும் தரும் திரிபுரசுந்தரிக்கு நமஸ்காரம்.

80. ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று காரியங்களுக்கும்நாயகியான கௌரிக்கு எனது நமஸ்காரம்

81. ஸ்ரீ ஷோட சாக்ஷரீ மந்த்ர மத்ய காயை நமோ நம :
82. அநாத்யந்த ஸ்வயம் பூத திவ்ய மூர்த்யை நமோ நம :
83. பக்த ஹம்ஸவ திமுக்ய நியோ காயை நமோ நம :
84. மாத்ரு மண்டல ஸம்யுக்த லலிதாயை நமோ நம :
85. பண்ட தைத்ய மகா ஸத்வ நாசனாயை நமோ நம :
86. க்ரூர பண்ட சிரச்சேத நிபுணாயை நமோ நம :
87. தராச்யுத ஸுரா தீச ஸுகதாயை நமோ நம :
88. சண்ட முண்ட நிசும்பாதி கண்டனாயை நமோ நம :
89. ரக்தாக்ஷ ரக்த ஜிஹ்வாதி சிக்ஷணாயை நமோ நம :
90. மகிஷாஸுரதோர் வீர்ய நிக்ரஹாயை நமோ நம :

81. ஸ்ரீ ஷோட சாக்ஷரீ மந்திரத்தின் நடுவில் இருப்பவளே உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

82. ஆதி அந்தமற்ற, ஸ்வயமாகஉண்டான பரா சக்தியை நமஸ்கரிகின்றேன்.

83. ஆக்ஞா சக்ரத்து தேவதைகளான ஹம்ஸவதி, க்ஷமாவதி ஆகியவர்களால் பூஜை செய்யப்படும் பரமேஸ்வரிக்கு எனது நமஸ்காரம்.

84. மாத்ருகா மண்டல ராணியான லலிதா தேவிக்கு எனது நமஸ்காரம்.

85. மன்மதனை எரித்த சாம்பலில் உண்டான பண்டாசூரனை வதைத்த பாலாம்பிகைக்கு எனது நமஸ்காரம்.

86. பண்டாசூரன் சிரசைக் கொய்த ரக்தாக்ஷிக்கு எனது நமஸ்காரம்.

87. பிரும்மா, விஷ்ணு, இந்திரன் முதலானவர்களுக்கு சுகத்தைக் கொடுக்கும் அமிர்தவதனேஸ்வரிக்கு எனது நமஸ்காரம்.

88. சண்டன், முண்டன், நிசும்பன் முதலான அரக்கர்களை வதைத்த பத்ரகாளியை நமஸ்கரிக்கின்றேன்.

86. ரக்தாக்ஷன், ரக்த பீஜன் முதலிய ராக்ஷஸர்களை சம்ஹரித்த துர்க்கா தேவிக்கு நமஸ்காரம்.

90. மஹிஷாஸுரனின் வீர்யத்தை அழித்த மஹிஷாசுர மர்த்தினியை நமஸ்கரிக்கின்றேன்.

91. அப்ரமேச மஹோத்ஸாக காரணாயை நமோ நம:
92. மஹேச யுக்த நடன தத்பராயை நமோ நம:
93. நிஜபர்த்ரு முகாம் போஜ சிந்தனாயை நமோ நம:
94. வ்ருஷபத்வஜ விக்ஞான தப: ஸித்யை நமோ நம:
95. காமக்ரோதாதி ஷட்வர்க்க நாசநாயை நமோ நம:
96. ஜன்ம ம்ருத்யு ஜராரோக பஞ்சனாயை நமோ நம:
97. விரக்தி பக்தி, விஞ்ஞான ஸித்திகாயை நமோ நம:
98. நாக நாகாஜார்ச்சித பத ஸரோஜாயை நமோ நம:
99. ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸுதத்வாயை நமோ நம:
100. ஸ்ரீ வீரபக்த விக்ஞான நிதானாயை நமோ நம:

91. சுந்தரேஸ்வரரின் சந்தோஷத்துக்குக் காரணமான தடாதகை பிராட்டியை நமஸ்கரிக்கிறேன்.

92. நடராஜரோடு நடனத்தில் மூழ்கி இருக்கும் சிவகாமியம்மையை நமஸ்கரிக்கின்றேன்.

93. சோமேஸ்வரரையே நினைத்துக் கொண்டிருக்கும் மீனலோசனிக்கு எனது நமஸ்காரம்.

94. ரிஷபா ரூடரநான சிவனாரின் தவத்துக்கு ஆதாரமாக விளங்கும் பார்வதிக்கு நமஸ்காரம்.

95. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் முதலிய ஆறு தீய குணங்களையும் நாசம் செய்பவளே உனக்கு நமஸ்காரம்.

96. பிறப்பு, இறப்பு, வயோதிகம், வியாதி இவைகளை ஒழிப்பவளே உனக்கு நமஸ்காரம்.

97. விரக்தி, பக்தி, ஞானம். முதலிய சித்திகளைத் தரும் ஞானம்பிகைக்கு நமஸ்காரம்.

98. குபேரனால் அர்ச்சிக்கப்படும் பாதத்தாமரைகளை நமஸ்கரிக்கின்றேன்.

99. சகல சமய நூல்களின் கருத்துக்கள், வேதாந்தங்கள் அனைத்துமாய் விளங்கும் கல்யாணிக்கு எனது நமஸ்காரம்.

100. சாம்பசிவனின் பக்தர்களுக்கு ஞானத்தைக் கொடுக்கும் சாம்பவியை நமஸ்கரிக்கின்றேன்.

101. அசேஷ துஷ்ட தனுஜ ஸூதனாயை நமோ நம:
102. ஸாக்ஷாத் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி மனோக் ஞாயை நமோ நம:
103. ஹயமேதாக்ர ஸம்பூஜ்ய மஹிமாயை நமோநம:
104. தக்ஷப்ரஜாபதி ஸூதாவேஷாட்யாயைநமோநம:
105. ஸூம பாணேக்ஷூ கோதண்ட மண்டி தாயை நமோ நம:
106. நித்ய யௌவலன மாங்கல்ய மங்களாயை நமோ நம:
107. மகாதேவ ஸமாயுக்த மஹா தேவ்யை நமோநம:
108. சதுர் விம்சதி தத்வைக ஸ்வரூபாயை நமோ நம:

101. துஷ்டர்களை அழிக்கும் சாமுண்டி தேவிக்கு எனது நமஸ்காரம்.

102. பரமசிவனின் மனதைத் தெரிந்து வைத்திருக்கும் பார்வதிக்கு எனது நமஸ்காரம்.

103. யாகங்களில் முதலில் வழிபடும் மஹாமாயைக்கு எனது நமஸ்ககரம்.

104. தக்ஷனுக்கு புத்ரியாக அக்னியில் உதித்த அயோ நிஜையை நமஸ்கரிக்கின்றேன்.

105. புஷ்ப பாணம், கரும்பு, வில் இவற்றைத் தரித்திருக்கும் ராஜராஜேஸ்வரியை மண்டியிட்டு நமஸ்கரிக்கின்றேன்.

106. என்றும் இளமையான, நித்ய சுமங்கலியான மங்களவல்லிக்கு எனது நமஸ்காரம்.

107. சிவனின் உடம்பில் பாதியாக விளங்கும் மஹா தேவிக்கு எனது நமஸ்காரம்.

108. 24 தத்துவங்களாய் பரிமளிக்கும் ஒரே உருவ முள்ள லலிதாம்பிகைக்கு நமஸ்காரம்.

இதை பக்தியோடு படிப்பவர்க்கு நினைத்ததை அம்பிகை உடனே நிறைவேற்றுவாள் என்பதில் ஐயமில்லை.

## ஸ்ரீ துர்கா ஆபத்துத்தாரக ஸ்தோத்திரம்

பரமசிவனால் பார்வதிக்கு சொல்லப்பட்டது. கடன், சத்துருபயம், ஜெயில், திருட்டு பயம் மாளாத சங்கடம் உள்ளவர் ஒரு மனதுடன் விளக்கேற்றி வைத்து வெறும் அர்த்தத்தைப் படித்தாலும் மலைபோல் முன் நிற்கும் துயரம் பனிபோல் விலகிவிடும். இது திண்ணம்.

1. நமஸ்தே சரண்யே ஸிவே ஸானுகம்பே
 நமஸ்தே ஜகத் வ்யாபிகே விஸ்வரூபே |
 நமஸ்தே ஜகத் வந்த்ய பாதார விந்தே
 நமஸ்தே ஜகத் தாரிணி த்ராஹி துர்கே ||

சரணமடைந்தவனைக் காப்பவளே! மங்களத்தைத் தருபவளே! கருணைக் கடலான துர்க்காதேவி தங்களுக்கு நமஸ்காரம். உலகம் பூராவும் நிறைந்திருப்பவளே! விசுவ ரூபமெடுத்தவளே, உன்னை நமஸ்கரிக்கின்றேன். உலகத்தி லுள்ளோரெல்லாம் நமஸ்கரிக்கும் பாதார விந்தங்களை நானும் வணங்குகிறேன். ஆபத்திலிருந்து பூவுலகை காக்கும் தாரிணி உன்னைப் பணிகின்றேன். ஓடிவந்து என்னைக் காப்பாற்று.

2. நமஸ்தே ஜகச் சிந்தயமான ஸ்வரூபே
 நமஸ்தே மஹா யோகினி ஞானரூபே |
 நமஸ்தே நமஸ்தே ஸதானந்தரூபே
 நமஸ்தே ஜகத்தாரிணி த்ராஹி துர்கே ||

உலகத்தாரால் சிந்திக்கத்தகுந்த ஸ்வரூபத்தை உடையவளே தங்களுக்கு நமஸ்காரம். மஹாயோகினியும், ஞானரூபிணியுமான துர்க்கைக்கு நமஸ்காரம். எப்போதும் ஆனந்த மயமாயிருப்பவளே! என்னை ஓடிவந்து காப்பாற்று.

3. அனாதஸ்ய தீனஸ்ய த்ருஷ்ணா துரஸ்ய
பயார்தஸ்ய பீதஸ்ய பத்தஸ்ய ஜந்தோ |
த்வமேகா கதிர் தேவி நிஸ்தார கர்த்ரீ
நமஸ்தே ஜகத் தாரிணி த்ராஹி துர்கே ||

நான் ஆதரவற்ற அனாதை; பரிதாபத்துரிய தீனன்; ஆசை என்னை அலைக்கழிக்கின்றது. எப்போதும் பயமும், கவலையும் ஆட்டிவைக்கின்றதே! உன்னையே தஞ்சமென கெஞ்சி நிற்கும் இந்த ஏழையின் சஞ்சலத்தைத் தீர்க்க வேண்டுமென்று நமஸ்கரிக்கின்றேன்.

4. அரண்யே ரணே தாருணே ஸத்ரு மத்யே
நலே ஸாகரே ப்ராந்தரே ராஜ கேஹே |
த்வமேக கதிர்தேவி நிஸ்கார நௌகா
நமஸ்தே ஜகத்தாரிணி த்ராஹி துர்கே ||

காட்டிலும், யுத்தத்திலும்; பயங்கரமான சத்துருக்கள் நடுவிலும், அக்கினியிலும், கடல் நடுவிலும், புயலிலும், தாங்கள் ஒருவர்தான் ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றக் கூடியவர் என்று அறிந்து உங்களைத் தஞ்சமடைந்து வணங்குகின்றேன்.

5. அபாரே மஹா துஸ்தரேத்யந்த கோரே
விபத் ஸாகரே மஜ்ஜதாம் தேஹ பாஜாம் |
த்வமேகா கதிர் தேவி நிஸ்தார ஹேதுர்
நமஸ்தே ஜகத் தாரிணி த்ராஹி துர்கே ||

மானிடர்களுக்கு சில சமயம் வரும் துன்பங்கள் நடு சமுத்திரத்தில் அபாரமான ஆழத்தில் மூச்சு முட்டிச் சாவது

போல் பயங்கரமாய் முழுக வைக்கும். அச்சமயம் கப்பலைப் போல் வந்து கைகொடுக்கும் தேவி தங்களுக்கு நமஸ்காரம்.

6. நமஸ் சண்டிகே சண்ட துர் தண்டலீலா
ஸமுத் கண்டிதா கண்டிதா ஸேஷ ஸத்ரோ |
த்வமேகா கதிர்தேவி நிஸ்தார பீஜம்
நமஸ்தே ஜகத் தாரிணி த்ராஹி துர்கே ||

பயங்கரமாகவும், எதிர்க்க முடியாத விளையாட்டினால் சண்டமுண்டர்களை நாசமாக்கிய சண்டிகே, இப்போது என்னைக் காப்பாற்றக் கூடியவள் நீ ஒருத்தியே. உன்னை வணங்குகின்றேன்.

7. த்வமே வாக பாவாத்ருதா ஸத்ய வாதிந்ய
ஜாதா ஜிதாக்ரோதனாத் க்ரோத நிஷ்டா |
இடா பிங்களா த்வம் ஸுஷும்ன ச நாடி
நமஸ்தே ஜகத் தாரிணி த்ராஹி துர்கே ||

பிறரைக் கெடுக்க வேண்டும் என்ற பாப எண்ணங்கள் நிறைந்தவர் தியானித்தால் அவர்சிந்தையில் நிலைப்பதில்லை. புருஷனுக்கு சத்தியமாய் நடந்து கொள்ளும் பெண்களை எப்போதும் காக்கின்றாய். கோபத்தில் இருந்தாலும் கோபக் காரர்களிடமிருந்து விலகிவிடுகின்றாய்! பிறப்பற்றவளே! சரீரத்தின் இயக்கமாக இருக்கின்றவளே! தங்களுக்கு நமஸ் காரம்.

8. நமோ தேவி துர்கே ஸிவே பீம நாதே
ஸரஸ்வத் யருந்தத்ய மோகஸ்வரூபே |
விபூதி: ஸசி காளராத்ரி: ஸதீ த்வம்
நமஸ்தே ஜகத் தாரிணி த்ராஹி துர்கே ||

துர்க்காதேவி! சிவஸ்வரூபி! நீ மீட்டும் சங்கீதமும் பயங்கரமாயிருக்கும்! அருந்ததி! எண்ணற்ற ரூபமுடையவளே! உன்னை நமஸ்கரிக்கின்றேன். தாக்ஷாயணி! இந்திராணி! மகா

காளி! மஹாலக்ஷ்மி! எல்லாமாயும் விளங்குகின்ற உன் திருவடிகளில் பணிகின்றேன்.

9. ஸரணமஸி ஸுராணும் ஸித்த வித்யா தராணும்
முனி மனுஜ பஸூனும் தஸ்யுபிஸ்த்ராஸி
தானும் ||
ந்ருபதிக் ருஹகதானும் வ்யாதிபி: பீடிதானும்
த்வமஸி ஸரணமேகா தேவி துர்கே ப்ரஸீத ||

ஹே துர்க்கே! தேவ முனிவர்களுக்கும் சித்த வித்யா தரர்களுக்கும் கின்னர கிம்புருடர்களுக்கும் மனிதர்களுக்கும் பசுக்கள் போன்ற பிராணிகளுக்கும், நோயினுல் அவஸ்தைப் படுகின்றவர்களுக்கும் அரசாங்கத்தால் தண்டனை பெற்றவர்களுக்கும் நீங்கள்தான் காப்பாற்றுகின்றவர். எனக்கும் அருள் புரிவாயம்மா!

10. இதம் ஸ்தோத்திரம் மயா ப்ரோக்த மாபதுத்தார
ஹேதுகம்
த்ரிஸந்த்ய மேக ஸந்த்யம் வாபடனுத் கோர
ஸங்கடாத் ||

11. முச்யதே நாத்ர ஸந்தே ஹோ புவி ஸ்வர்கே
ரஸாதலே |
ஸர்வம் வா ஸ்லோகமேகம் வாய :படேத் பக்திமான்
ஸதா ||

12. ஸ ஸர்வம் துஷ்க்ருதம் த்யக்த்வா ப்ராப் னோதி பரமம்
பதம் |

படனுதஸ்ய தேவேஸி கிம் ந ஸித்யதி பூதலே ||
13. ஸ்தவராஜ மிதம் தேவி ஸம்க்ஷே பாத் கதிதம்மயா ||

இந்தஸ்தோத்திரம் ஆபத்திலிருந்து நிச்சயம் காப்பாற்றும். மூன்று வேளைகளிலும் அல்லது ஒரு வேளையாவது பக்தியோடு படிப்பவன் கொடூரமான கஷ்டங்களிலிருந்தும்

விடுபடுவான் என்பதில் சந்தேகமில்லை. மூவுலகத்திலிருப்பவர்களில் ஒருவர் ஒரு ஸ்லோகத்தை பக்தியுடன் படித்தாலே பாபங்களெல்லாம் போய்விடும். எல்லா ஸ்லோகங்களையும் படிப்பவனுக்கோ மோக்ஷ சாம்ராஜ்ய வாசல் திறந்திருக்கிறது. இதைப் படிப்பவனுக்கு இந்த உலகில் அடைய முடியாதது எதுவுமே இல்லை. ஸ்தோத்திரங்களின் ராஜா வான இந்த ஸ்தோத்திரத்தை சுருக்கமாக உனக்கு உபதேசிக்கிறேன் என்று பரமசிவன் பார்வதிக்கு சொன்னார்.

ஸ்ரீ சித்தேஸ்வரி தந்த்ரத்திலுள்ள இந்த துர்க்கா ஸ்தோத்திரத்தில் நமஸ்தே என்று வரும் இடத்திலெல்லாம் துர்க்கை படத்திற்குமுன் நமஸ்காரம் செய்வது இரட்டிப்பு பலனைத் தரும்.

ஆபத்துத்தாரக ஸ்ரீதுர்கா ஸ்தோத்திரம் முற்றிற்று.

---



